# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் தமிழ் வார ஏடு

கதிர் 15 9—10—77 12 பக்கம் 50 காசு பொறி 29


**தமிழ் மாநிலக் குழு கூட்டம்**

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தமிழ் மாநில செயற்குழுக் கூட்டம் வரும் அக்டோபர் 10, 11, தேதிகளில் கூடுகிறது. மாநிலக் குழுக் கூட்டம் அக். 25, 26, 27 தேதிகளில் கூடுகிறது.

## தோழர் வெங்கடாசலத்தைக் கடத்திச் சென்ற

# கொலைகாரர்களை கைது செய்க

# தமிழகமெங்கும் ஆர்ப்பாட்டங்கள்

தஞ்சை விவசாயப் பெருங்குடி மக்களது அன்புத்தலைவராக தமிழக விவசாய இயக்கத்தின் சிறந்த தலைவர்களில் ஒருவராகத் திகழ்ந்த தோழர் என். வெங்கடாசலத்தைக் கடத்திச் சென்ற கயமைக் கூட்டத்தை கைது செய்! "கொலைகாரக் கூட்டத்தைக் கூண்டிலேற்று" என்ற முழக்கம் கடந்த 4ந்தேதியன்று தமிழகமெங்கும் ஒலித்து எதிரொலித்தது. தஞ்சை மாவட்டம் முழுதும் விவசாயத் தொழிலாளர்கள் கண்டன வேலைநிறுத்தம் செய்தனர்.



மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு விடுத்த அறைகூவலுக்கிணங்க எல்லா மாவட்டங்களிலும் நூற்றுக்கணக்கான இடங்களில் ஆவேச முழக்கங்கள் எழுப்பி ஆர்ப்பாட்டங்கள் நடத்தி ஆங்காங்குள்ள அரசு அதிகாரிகளிடம் மகஜர்கள் அளிக்கப்பட்டன.

தஞ்சை மாவட்ட ஏழை விவசாயிகளின், விவசாயத் தொழிலாளர்களின், அடக்கி ஒடுக்கப்பட்ட ஏழை அரிஜன மக்களின் உற்ற தோழனுகவும் தலைவனுகவும் விளங்கிய அருமைத் தோழர் என். வெங்கடாசலம் கடத்திச் செல்லப்பட்டு கொலை செய்யப்பட்ட கொடூரத்திற்கு தங்களது கோபத்தையும் கண்டனத்தையும் தெரிவிக்கும் வகையில் தஞ்சை மாவட்டம் முழுதும் விவசாயத் தொழிலாளர்களும் விவசாயிகளும் செப். 4ந்தேதி அடையாள வேலைநிறுத்தம் செய்தனர்.

### தஞ்சாவூர்

தஞ்சை நகரில் உணர்ச்சி மிக்க ஆவேச ஆர்ப்பாட்டம் நடந்தது. ஊர்வலத்தில் ஐயாயிரத்திற்கும் அதிகமானேர் கலந்து கொண்டனர். இந்த ஊர்வலத்திற்கு சிஐடியூ தமிழ் மாநில பொதுச் செயலாளர் தோழர் உமாநாத், தமிழ்நாடு விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் வீரய்யன், தோழர் மணியரசன் ஆகியோர் தலைமை வகித்தனர். தஞ்சை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து புறப்பட்ட உணர்ச்சிமிக்க ஊர்வலத்தில் அதிகமான அளவில் பெண்கள் கலந்துகொண்டனர். நகரின் முக்கிய வீதிகள் வழியாக சென்று ஊர்வலம் திலகர் திடலை அடைந்தது.

அத்திடலில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் உமாநாத், வீரய்யன், ரயில்வே தொழிலாளர் தலைவர் அனந்த நம்பியார், மணியரசன் மற்றும் பல தோழர்கள் பேசினர். இப் பொதுக்கூட்டத்தில் 10 ஆயிரத்திற்கும் அதிகமான மக்கள் கலந்து கொண்டனர்.

நன்னிலத்திலும் நான்காயிரத்திற்கும் அதிகமான ஆண்களும் பெண்களும் கலந்து கொண்ட கண்டன ஊர்வலம் நடைபெற்றுள்ளது.

### திருச்சி

இந்நகரில் நடைபெற்ற கண்டன ஊர்வலம் மெயின் கேட்டிருந்து புறப்பட்டு நகரின் முக்கிய வீதிகளின் வழியாகச் சென்றது. தாராநல்லூரில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தமிழக ஜனநாயக மாதர் சங்கச் செயலாளர் தோழர் பாப்பா உமாநாத், தோழர் வரதராஜன், சண்முக சுந்தரம் ஆகியோர் தோழர் வெங்கடாசலம் கடத்திச் செல்லப்பட்டு கொலை செய்யப்பட்டதைக் கண்டித்துப் பேசினர்.

### சென்னை

தோழர் வெங்கடாசலம் கொலை செய்யப்பட்டதைக் கண்டித்தும் கொலைகாரர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கக் கோரியும் சென்னையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் சிஐடியூ தமிழக துணைத்தலைவர் தோழர் வி. பி. சிந்தன், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை-செங்கை மாவட்ட செயலாளர் தோழர் பி. ஆர். பரமேஸ்வரன், தோழர் அரிபட், தமிழக ஜனநாயக மாதர் சங்க துணைத்தலைவர் தோழர் மைதிலிசிவராமன், தோழர் சௌந்தரராஜன் ஆகியோர் பேசினர். தோழர் வெங்கடாசலம் கொலை செய்யப்பட்டதைக் கண்டித்தும் அதன் மீது கடும் நடவடிக்கைகள் எடுக்குமாறு அரசாங்கத்தை வற்புத்தி இக்கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இத்தீர்மானம் முதலமைச்சருக்கு அனுப்பப்பட்டது.

### மதுரையில்

#### கொளுத்தும் வெயிலில்

"வெங்கடாசலத்தைக்கடத்திச்சென்ற கொலை வெறிகும்பலைக் கைது செய்! என்ற முழக்கங்களை ஆத்திர ஆவேசமுடன் எழுப்பிக்கொண்டு சுமார் 2000 பேர் பெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலமாக மதுரை கலெக்டர் அலுவலகம் சென்று மகஜர் ஒன்று கலெக்டரிடம் அளிக்கப்பட்டது.

கொளுத்தும் வெயிலில் சாந்தி தியேட்டரிலிருந்து புறப்பட்ட இந்த ஊர்வலத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சிஐடியூ, விவசாயிகள் சங்கம், ஜனநாயக மாதர் சங்கம், சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி. இந்திய மாணவர் சங்கம் மற்றும் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம், மோட்டார் தொழிலாளர் சங்கம், மதுரை நகர் மற்றும் மேலூர் கைத்தறித் தொழிலாளர் சங்கங்கள், மாநகராட்சித் தொழிலாளர் சங்கம், ஜெனரல் மோட்டார் ஒர்க்கர்ஸ் யூனியன், கூட்டுறவு ஊழியர்கள் சங்கம் ஆகியவற்றைச் சார்ந்த தோழர்கள் இந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

தோழர்கள் கே.பி.ஜானகியம்மாள், எம். முனியாண்டி, வி. வாழவந்தான், கே. பூச்சி. கே. சுப்பையா, எஸ். மன்னூர் சாமி, எஸ். ஏ. பெருமாள், பாலகிருஷ்ணன், கே. எம். கணபதி, டி. எஸ். சுந்தரராஜன், டி. கே. முரளீதரன், நன்மாறன், மாணவர் சுப்பையா, ஆகியோர் ஊர்வலத்துக்கு தலைமை வகித்துச் சென்றனர்.

ஊர்வலம் கலெக்டர் அலுவலகத்தை அடைந்ததும் பிரதிநிதிகள் குழு கலெக்டரை சந்தித்து அவரிடம் முதலமைச்சருக்கு அனுப்ப வேண்டிய கோரிக்கை மகஜரை சமர்ப்பித்தது.

### நெய்வேலி தொழிலாளர்

#### வேலை நிறுத்தம் செய்ய முடிவு

கடந்த 1976-77-ம் ஆண்டில் அதிக இலாபம் ஈட்டித் தந்துள்ளதால், தங்களுக்கு முதலில் 20 சதவீதம் போனஸ் தந்துவிட்டு, இறுதி போனஸ் பற்றி தொடர்ந்து பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என்று கோரி, நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்யவிருக்கிறார்கள். இதற்கான வேலை நிறுத்த நோட்டீஸ் கடந்த 22—9—77-ல் சட்டப்படி கொடுக்கப்பட்டுவிட்டது. அக். 6-ந்தேதிக்குப் பிறகு என்றைக்கு வேண்டுமானாலும் வேலை நிறுத்தம் துவங்கும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

வேலை நிறுத்தம் செய்வதா வேண்டாமா என்று தொழிலாளர்கள் மத்தியில் வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. அதில் 12, 728 பேர் கலந்து கொண்டனர். 11, 690 பேர் வேலை நிறுத்தத்துக்கு ஆதரவாக வாக்களித்தனர். மீதிப் பேரில் சுமார் 250 வாக்குகள் செல்லாதவையாகி விட்டன.

வேலைநிறுத்தத்தை நடத்திச் செல்ல அனைத்துச் சங்கப் பிரதிநிதிகள் அடங்கிய கூட்டமைப்பு தயாரிப்புப் பணிகளில் ஈடுபட்டு வருகிறது.

## அக்டோபர் 24-30

# கோரிக்கை வாரம்

அன்புமிக்க தோழர்களே,

18—9—77-ல் டெல்லியில் கூடிய அகில இந்திய தொழிற்சங்க சிறப்பு மாநாட்டு அறிக்கையும் தீர்மானமும் நீங்கள் ஏற்கனவே படித்திருப்பீர்கள். அம்மாநாட்டு முடிவுக்கேற்ப, அக்டோபர் 24-30.ல் கோரிக்கை வாரம் அனுஷ்டித்து, மாநாட்டின் முடிவுகளை தமிழகத் தொழிலாளரிடையே விளக்கிப் பிரசாரம் செய்யவேண்டும்.

மாநாட்டில் பங்கு கொண்ட தொழிற்சங்க அமைப்புகளின் மாவட்ட, ஸ்தல கிளைகளுடனும், இதர தொழிற்சங்க அமைப்புகளுடனும் உடனடியாகத் தொடர்பு கொண்டு, இந்த வாரத்தை வெற்றிகரமாக அனுஷ்டிக்க வழிகாட்டும் தயாரிப்புக் கமிட்டிகளை ஆங்காங்கு அமைப்பதிலும் மற்றும் கடமைகளிலும் சி ஐ டி யூ சங்கங்கள் முன் முயற்சி எடுக்க வேண்டுகிறேன்.

சிஐடியூ தமிழ் மாநிலக்குழு — ஏ. நல்லசிவன், செயலாளர்

மதுரை, 5—10 77

தீக்கதிர்

# ஜனதா ஆட்சிக்கு ஒரு சவால்!

இந்திரா கைதும் விடுதலையும் ஜனதா அரசின் உறுதியற்ற ஊசலாட்டக் கொள்கையின் விளைவே.

நாற்பதாயிரம் குற்றச்சாட்டுகள் ஷா கமிஷன் முன் இருந்தும், அந்தக் குற்றச்சாட்டுகளின் அடிப்படையில் இந்திரா கோஷ்டியைக் கைதுசெய்து தண்டிக்க முடியாத கையாலகாத்தனத்தையே ஜனதா அரசு வெளிப்படுத்தியுள்ளது.

பட்டப்பகலில் பலர் முன்னிலையில் படுகொலை புரிந்த கொலைகாரனைக் கைது செய்து தண்டிக்கமுடியாத ஓர் ஆட்சி, தான் சட்டப்படி ஆட்சிநடத்துவதாக கூறிக்கொள்வது நகைப்பிற்குரியது. இது ஜனதா ஆட்சிக்குவிடப்பட்டுள்ள ஒரு சவால்.

ஊரறிய உலகறிய ஒரு பயங்கர அரைப்பாசிஸ்ட் சர்வாதிகாரத்தை நடத்தியது இந்திரா கோஷ்டி.

இதுபற்றிய நம்நாட்டு மக்களது தீர்ப்பு தெளிவானது; சந்தேகத்திற்கிடமில்லாதது. பதவியைக் கையில் வைத்துக் கொண்டு கோரநர்த்தனமாடிய இந்தக் கும்பலை தேர்தல் களத்தில் ஆவேச உணர்ச்சியுடன் பேரெழுச்சியுடன் முறியடித்துக் காட்டினர் மக்கள்.

இந்தக் கோஷ்டி பற்றிய மக்களது நிலை, மனோபாவம் சரியானதாகவே அன்றும், ஏன் இன்றும், உள்ளது.

இந்த பாசிஸ்ட் கோஷ்டியை பதவியிலிருந்து அகற்றி அரசாங்க பீடத்தில் அமர்த்தினார்களே ஜனதா கட்சியை! அந்தக் கட்சியின் ஆட்சியின் தவறான போக்கினால்தான், இன்று இந்தக் கோஷ்டி மீண்டும் பயங்கர உரு வெடுக்கத் தலைப்பட்டுள்ளது.

மனித ரத்தம் பருகிய புலி ஆரம்பத்தில் பதுங்கியது. எதற்காக? மீண்டும் பாய்வதற்காக!

தேர்தல் முடிந்ததும் இந்திரா காந்தி, தான் அரசியலில் தீவிரப் பங்குகொள்ளப் போவதில்லை என்றார். நம்பினார்கள் ஜனதாவினர். மன்னிப்போம் மறப்போம் என்ற குரல்களும் ஜனதா முகாமிற்குள்ளிருந்து எழும்பின.

இந்தப் போக்கின் அபாயகரமான விளைவுகளைப் பற்றி எச்சரித்தது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி. ஜனநாயக ஆர்வமிக்கோர் எச்சரித்தனர். தாமதமின்றி இந்த ஜனநாயக விரோதிகள் மீது நடவடிக்கை எடுக்கக் கோரினர்.

இந்தக் கோரிக்கையை மிகுந்த தயக்கத்துடன் ஏற்று ஜனதா அரசு நடவடிக்கை எடுக்க முன்வந்தது.

ஜனநாயகத்தையும் மக்களது உரிமைகளையும் முடமாக்கிய கோஷ்டி இது என்பதால்தான் இந்த நாட்டு மக்கள் இக்கோஷ்டியை நிராகரித்தார்கள் என்பதே யதார்த்தம்.

ஆனால் ஜனதா ஆட்சியோ பிரதானமான இந்த அரசியல் குற்றச்சாட்டை முன்னுக்கு வைக்காமல், பல ரகமான ஊழல் குற்றச்சாட்டின் பேரில் இந்திரா கும்பலை சிறைக்குள் தள்ளிவிடலாம் என்று நம்பியது, இன்றும் நம்புகிறது.

இந்திரா காந்தி செய்த தவறுகள் எப்படிப்பட்டவை?

இதோ உள்துறை அமைச்சர் சரண்சிங்கே கூறுகிறார்:

“அரசியல் சட்டத்தைத் தனக்குச் சாதகமாக மாற்றிக் கொண்டார். வாழு உரிமை உட்பட மக்களின் அடிப்படை உரிமைகளைப் பறித்தார். பத்திரிகைகளின் குரலை நெறித்தார். நீதித்துறையின் சுதந்திரத்தைப் பறித்தார். பொது வாழ்வும் நிர்வாகமும் அவற்றுக்குரிய மதிப்பை இழந்தன. ஒரு லட்சம் பேருக்குமேல் சிறைகளில் வைக்கப்பட்டார்கள். ஆயிரக்கணக்கான குடும்பங்கள் சீரழிந்தன. நம் நாட்டின் நற்பெயருக்கு களங்கம் ஏற்படுத்தினார். இவை எல்லாம்—அன்று பாசிஸ்ட் கொலைகார ஹிட்லரின் கையாட்கள் மீது நூரம்பர்க்கில் நடத்தப்பட்ட சர்வதேச வழக்குப்போன்று ஒரு வழக்கை இந்திரா காந்தி மீது தொடுக்கப்போதுமானவை. என்றாலும், நாங்கள் (அதாவது ஜனதா அரசு) இந்தநாட்டின் சாதாரண சட்டப்படி இந்த நாட்டிலுள்ள கோர்ட்டுகளில் விசாரணை நடத்துவதென முடிவு செய்துள்ளோம்” என்கிறார்.

சாதாரண சட்டப்படி, விசாரணை நடத்த முயன்றதின் பலன் என்ன என்பதை இப்பொழுது சரண்சிங் உணருவார் என்று நம்புகிறோம்.

நூரம்பர்க் விசாரணை போன்று ஒரு விசேஷ நீதிமன்றத்தில் இந்திரா கும்பலை நிறுத்திட ஜனதா ஆட்சியாளர்கள் தயங்குவது ஏன்?

இந்த நாட்டில் ஜனநாயகம் நீடித்திருப்பதை விரும்பும் கோடிக்கணக்கான மக்கள் எழுப்பிடும் கேள்வி இது.

சாதாரண சட்டங்களிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கு இந்திரா கோஷ்டிக்கு போதிய சாதுர்யமும் வசதிகளும் நிறைய உண்டு. சமீபத்தில் நடந்த கைது—விடுதலை நாடகம், இதனை நன்கு உணர்த்திவிட்டது. விசேஷ நீதிமன்றம் நியமித்து விசாரணை செய்ய ஜனதா ஆட்சி தயங்குவது ஏன்? சாதாரண மனிதர்கள் செய்த குற்றமல்லவே இந்திரா காந்தி புரிந்த குற்றம்?

ஒருக்கால், ஜனதா ஆட்சியாளர்களில் சிலர் அமெரிக்க—பிரிட்டிஷ் பாணியில் இரு கட்சி ஆட்சி முறையை இந்த நாட்டில் ஏற்படுத்த விரும்புவதால், இந்திரா காந்தியையும் அவரது கோஷ்டியையும் அரசியல் செல்லாக்காசாக்கும் வகையில் நடவடிக்கை எடுக்க விரும்பவில்லையா?

# தொழிற் தகராறில் போலீஸ் தலையீடு கூடாது

## தமிழக அரசுக்கு சிஐடியூ வற்புறுத்தல்

தமிழக சி. ஐ. டி. யூ. வின் மாவட்டக் குழுக்களின் செயலாளர்கள் கூட்டம் தோழர் ஆர். உமாநாத் தலைமையில் 8–10–77 அன்று மதுரையில் நடந்தது.

தஞ்சை மாவட்டத்தில் மிராசுதாரர்களின் தூண்டுதலால் கடத்திச் செல்லப்பட்டு கொலை செய்யப்பட்டுள்ள தோழர் என். வெங்கடாசலத்தின் மரணத்துக்கு அனுதாபம் தெரிவித்து, அஞ்சலி செலுத்தப்பட்டது. அவரைக்கொன்ற உண்மையான குற்றவாளிகளை கண்டுபிடித்து விசாரித்து தண்டிக்க தமிழக அரசு தீவிர முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும் என்று தீர்மானம் வலியுறுத்தியது.

### கோரிக்கை வாரம்

18–9–77-ல் டெல்லியில் நடைபெற்ற அகில இந்திய தொழிற்சங்க சிறப்பு மாநாட்டின் முடிவுகளை தமிழக தொழிலாளி வர்க்கத்துக்கு விளக்கிக் கூற அக்டோபர் 24 முதல் 30 வரை கோரிக்கை வாரம் அனுஷ்டிப்பதென்றும், தேசிய மாநாட்டில் பங்கு கொண்ட தொழிற்சங்க அமைப்புகளின் மாநிலக் கிளைகளுடனும் மற்ற தொழிற்ங்க அமைப்புகளுடனும் சேர்ந்து இதைக் கொண்டாட முன்முயற்சி எடுப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

வரவிருக்கும் போனஸ் கோரிக்கைக்கான இயக்கம் குறித்தும் விவாதித்து முடிவுகள் எடுக்கப்பட்டன.

தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காக மாதக் கணக்கில் உறுதியுடன் போராடிவரும் சென்னை பாடி டி. வி எஸ். தொழிலாளர்களுக்கும், கோவை மாவட்டம் பெரியநாயக்கன்பாளையம் லட்சுமி மெஷின் ஒர்க்ஸ் தொழிலாளர்களுக்கும் ஆதரவு தெரிவிக்கப்பட்டது. குமரிமாவட்ட ரப்பர் தோட்டத் தொழிலாளருக்கும் அரக்கோணம் ஸ்டீல் தொழிலாளர் போராட்டத்துக்கும் ஆதரவு தெரிவிக்கப்பட்டது.

### அடக்குமுறைக்கு கண்டனம்

தமிழக அரசின் தொழிலாளர் கொள்கையில் சமீபத்தில் ஏற்பட்டுவரும் பின்னடைவு பற்றி பின்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் குறிப்பாக சென்னை பாடி பகுதியில் உள்ள டி. வி. எஸ். தொழில்கள், கோவை லெட்சுமி மெஷின் தொழிற்சாலை, கன்யாகுமரி தோட்டங்கள் ஆகியவற்றில் தொழிலாளர்கள் தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காகவும் உரிமைகளுக்காகவும் வீரமிக்க போராட்டங்களை நடத்துகிறார்கள். அவர்களுக்கு சிஐடியூவின் தமிழக மாவட்டங்களின் செயலாளர்கள்கூட்டம் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

அதே சமயத்தில் சமீபத்தில் அரசாங்கத்தின் தொழிலாளர் கொள்கையில் அதிகரித்து வரும் அடக்குமுறைப் போக்குகள் தோன்றியிருப்பதுகண்டு இக்கூட்டம் கவலை கொள்கிறது.

### கதவடைப்புக்கு பாதுகாப்பா?

சென்னை பாடியில் உள்ள டி. வி. எஸ் தொழில்களில் எந்தவிதமான முன்னறிவிப்பும் இல்லாமல் சட்டவிரோதமான கதவடைப்பு பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. இதற்கெதிராக 144 தடை உத்திரவு சட்டத்தை பிறப்பிப்பதற்குப் பதிலாக அச்சட்ட விரோதமான கதவடைப்புக்கு போலீஸ் பாதுகாப்பை அரசாங்கம் கொடுத்துக்கொண்டு இருப்பது பற்றி இக்கூட்டம் மிக்க கவலையும் ஆச்சரியமும் கொள்கிறது. முதல் அமைச்சர் முன்னிலையிலேயே ஏற்பட்ட ஒப்பந்தத்தை உடைப்பதற்கு அரசாங்கம் போலீஸ் பாதுகாப்பு கொடுத்துக் கொண்டிருக்கிறது.

### அறிவிப்புக்கு முரணான செயல்

தொழில் தகராறுகளில் போலீஸ் தலையிடாது என அரசாங்கம் அறிவித்திருந்தது. ஆனால் அதற்கு மாறாக, பாடியில் உள்ள டி. வி. எஸ். தொழில்களில் ஏற்பட்டுள்ள தொழில் தகராறுகளில் தலையிடுவதற்கு மத்திய ரிசர்வ் போலீசை அரசாங்கம் திரட்டி வருகிறது. கோவை லெட்சுமி மெஷின் தொழிற்சாலையின் தொழில் தகராறுகளில் தலையிடுவதற்கு ஆயுத ரிசர்வ் போலீசை திரட்டிவருகிறது.

லட்சுமி மெஷின் தொழிற்சாலையில் அஇஅதிமுக வின் சங்கம் உட்பட 7 சங்கங்கள் வேலைநிறுத்தத்தில் இறங்கின. அதேசமயத்தில் அரசாங்கமோ தன்னுடைய தொழிலாளர் இலாகாவை துஷ்பிரயோகம் செய்துள்ளது; நிர்வாகத்திற்குச் சாதகமான ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவதற்கு முற்றிலும் மைனாரிடி சங்கமான ஆளுங்கட்சி சங்கத்தை பயன்படுத்தியது; அதேஒப்பந்தத்தில் ஏனைய ஆறு சங்கங்களையும் ஒப்புக் கொள்ளச் செய்ய தன்னுடைய தொழிலாளர் இலாகாவை துஷ்பிரயோகம் செய்தது; ஆனால் அந்த ஒப்பந்தத்தை ஆறு சங்கங்களும் நிராகரித்துவிட்டு வேலைநிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்துகின்றன.

தொழிற்சாலை வாசலில் அமைதியாக மறியல் செய்வது என்பது தொழிற்சங்கங்களின் அடிப்படை உரிமை. ஆனால் வாசலையே தொழிலாளர்கள் அணுகுவதற்குக்கூட விடாமல் அவர்களைத் தடுப்பதற்கு அரசாங்கம் போலீசைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது; லட்சுமி மெஷின் தொழிற்சாலையின் பக்கத்தில் எங்கும் நெருங்க முடியாதவாறு போலீசை விட்டு தொழிலாளர்களை விரட்டியுள்ளது. ஆரம்பத்தில் அமைதியாக மறியல் செய்த 5 பெண்கள் போலீசாரால் அடிக்கப்பட்டுள்ளனர்.

### நவீன கருங்காலி முறை

தொழிற்சாலையோடு சம்பந்தமே இல்லாத புதிய தொழிலாளர்களை முழுமையாக நியமிப்பது என்பது வேலைநிறுத்தத்தை உடைக்கும் ஒருநவீன முறை; இம்முறை சமீபத்தில் நடைபெற்ற போக்குவரத்துத் தொழிலாளர்களின் போராட்டத்திலும் மிகக்குறைந்த கூலி கொடுக்கப்படும் தென்னாற்காடு மாவட்ட ஆரோரூட் கம்பெனி தொழிலாளர்கள் நடத்திய போராட்டத்திலும் கையாண்ட முறை. இதே முறை லட்சுமி மெஷின் தொழிற்சாலையிலும் போலீஸ்பாதுகாப்புடன் செயல்படுத்தப்படுகிறது.

எனவே, இத்தகைய அபாயகரமான நடவடிக்கைகளிலிருந்து பின்வாங்குமாறு அரசாங்கத்தை இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது; இத்தகைய நடவடிக்கைகள் விரைக்க தமிழக தொழிலாளி

(11-ம் பக்கம் பார்க்க)

# பாரதிக்கு விழா

தேச விடுதலைக்கும், பெண் விடுதலைக்கும், ஜாதிக் கொடுமை ஒழிப்புக்கும் உணர்ச்சிக் கொப்பளிக்கும் கவி பாடிய பாரதிக்கு, கடந்த மாதம் தமிழகத்தின் பல்வேறு நகரங்களிலும், சிற்றூர்களிலும் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கக் கிளைகள் நினைவு நாள் விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடின. இச்செய்திகளின் ஒரு பகுதி சென்ற வார தீக்கதிரில் பிரசுரிக்கப்பட்டது. அடுத்தபகுதி வருமாறு:—

## சென்னை

சென்னையில் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் சென்னை—செங்கை மாவட்டக் குழு சார்பில் மத்திய நூலகக் கட்டிடத்தில் பாரதி விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. கவியரங்கத்தில் ஏ. கே. சுகுமாறன், சந்திரன், பத்மநாபன், ஆலநந்தன், கெஜக்குமார், குப்புசாமி ஆகியோர் பாரதிக்குக் கவிதாஞ்சலி செலுத்தினர். டி. வி. எஸ். பாடி தொழிலாளர் பேராட்டத்தை ஆதரித்து சு. பொ. அகத்தியலிங்கம் கவிதை படித்தார்.

அவசர நிலை நீங்கிய பிறகும், மத்திய நூலகக் கட்டிடத்தில் 'ஹால் மீட்டிங்' நடத்த போலீஸ் அனுமதி பெற வேண்டியுள்ளதைக் கண்டித்து சென்னை. செங்கை, மாவட்டச் செயலாளர் ச. செந்தில்நாதன் கொண்டு வந்த தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

முத்துச்சாமி சிறப்புரையாற்றினார். கேசவன் பாரதியின் இலக்கியங்களை மதிப்பீடு செய்து ஆராய்ச்சிக் கட்டுரையொன்றைப்படித்தார். இவ்விழாவை சு. ப. செல்வம், இ. த. பச்சையப்பன் ஆகியோர்தலைமை வகித்து நடத்தினர்.

## திருச்சி

திருச்சி மாவட்ட முற்போக்கு எழுத்தாளர் சங்க சார்பில் திருச்சியில் செப்டம்பர் 17-ம் நாள் பாரதி விழா நடைபெற்றது. விழாவிற்கு மணிமாறன் தலைமையேற்ருர். கலைச்செல்வி, பாரதிக்கு கவிதாஞ்சலி செலுத்தினுர்.

சேவற்கொடியோன், டாக்டர் இளவரசு, திருமாறன், நா. பெரியசாமி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். செயலாளர் ஜெகதீசனின் நன்றியுரையுடன் விழா நிறைவுற்றது.

## கோவை

கோவையில் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் நகரக் கிளை, சிந்தனைப் பேரவை, இலக்கிய ஆய்வரங்கம் ஆகிய அமைப்புகளுடன் இணைந்து பாரதி விழா நடத்தியது. கு. வே. கிருட்டிணசாமி தலைமை வகித்தார். எழுத்தாளர் சங்க மாவட்டச் செயலாளர் கம்பராயன் வரவேற்புரை நிகழ்த்தினுர்.

விழா கருத்தரங்கில், கீதானந்தன், ஜன. சுந்தரம், புலவர் ஆதிஆகியோர் கருத்துரை வழங்கினர் அதைத்தொடர்ந்து நடந்த விவாதத்தில் விவேகி, சூ. மீ. காளிமுத்து, இளமுருகு, ஞானி, நல்லராகு, இரா. சித்துராசு ஆகியோர் பேசினர்.

## அவிநாசி

கோவை மாவட்டம் அவிநாசியில் கே. சி. சண்முகம் தலைமையில் பாரதி விழா நடைபெற்றது. மு. பழனிச்சாமி ஏ. அர்த்தநாரி, என். மயில்வாகனன் ஐ. எம். ஷெரீப், பி. ஆர். நடராஜன், மா அன்புச்செழியன் ஆகியோர் உரையாற்றினர்

## தஞ்சை

தஞ்சையில் டாக்டர் கே. மணியின் தலைமையில் பாரதி விழா நடைபெற்றது. முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் மாநில செயற்குழு உறுப்பினர் பெ. மணியரசன் வரவேற்புரை நிகழ்த்தினுர். "நயனதாரா" ஆசிரியர் தோழர் இளவேனில், சிறுகதை எழுத்தாளர் கரிச்சான் குஞ்சு ஆகியோர் கருத்துரைகள் வழங்கினர்.

## மதுராந்தகம்

இங்கு பாரதி விழா, கவியரங்கம், கருத்தரங்கம், பட்டிமன்றம்—என மூன்று அம்சங்களுடன் நடைபெற்றது. விழாவுக்கு ஸ்டான்லி தலைமை தாங்கினுர். ம. சோமசுந்தரம் வரவேற்புரை நிகழ்த்தினுர். "யாருக்காகப் பாடினுன் பாரதி?" என்ற பொதுத் தலைப்பில் அமைந்த கவியரங்கத்திற்கு த. எத்திராசன் தலைமை வகித்தார். துரை. சீனிவாசன், இரா. மாணிக்கம், இரா. சசிகுமார், என். மருத்துவமணி, க. பலராமன், கோ. செழியன், எம். எம்..கண்ணபிரான், ம. சோமசுந்தரம், க. தங்கவேலு ஆகியோர் கவிதைகள் வாசித்தனர்.

கருத்தரங்கத்திற்கு புலவர் நடேசநாராயணன் தலைமை வகித்தார். மு. கங்காதரன் தலைமையில் பட்டிமன்றம் நடைபெற்றது, மா.ச.முனிசாமி. முனியாண்டி, வி. செல்வராசு, க. பலராமன், டி. கிருட்டினராசு, என். மருத்துவமணி, கு. வேதாசலம், ம. சோமசுந்தரம் ஆகியோர் பேசினர்.

## இராசீபுரம்

சேலம் மாவட்டம் இராசீபுரத்தில் நடைபெற்ற பாரதி விழாவுக்கு நாவலாசிரியர் கு. சின்னப்பாரதி தலைமை வகித்து உரையாற்றினுர் கவிஞர் செம்மலர்ச்செல்வன் வரவேற்புரை ஆற்றினுர் தியாகி பழனிவேலாயுதம், சின்ஆயன் தி. கோவிந்தன்கு.சிவசங்கரன் சங்கரன் இராசைக் கவி, ஏ. கே. இராமசாமி சிறப்புரையாற்றினர்.

அடுத்து நாமக்கல் சுப்ரமணியம் நடுவராகக்கொண்டு பட்டிமன்றம் நடந்தது. கோ. பெ. நாராயணன் மு. முருகன், கிருஷ்ணமூர்த்தி, கு. சிவசங்கரன் ஆகியோர் ஓரணியாகவும், தி. கோவிந்தன் பெ. பரமேசுவரன் கொடையரசு பெ.சிதம்பரம் ஆகியோர் ஓரணியாகவும் நின்று சொற்போர் நடத்னர்.

## பண்ணுருட்டி

பண்ணுருட்டியில்எஸ். ஜெயராமன் தலைமையில் செப்டம்பர் 12-ல் பாரதிவிழா நடைபெற்றது. முதலில் பள்ளி மாணவர்களுக்கான பேச்சுப் போட்டி நடந்தது. முற்போக்கு எழுத்தாளர் சங்க தென்னுற்காடு மாவட்டச் செயலாளர் ஆர். பாலசுப்பிரமணியம் செள. சீனுவாசன், செல்வராஜ், ஆர். தங்கவேல், பாண்டுரங்கன், சுப்பராயலு, மோஹன்தாஸ் ஆகியோர் பேசினர். பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு ஆர். பாலசுப்ரமணியம் பரிசுகள் வழங்கினுர்.

## கணங்கன்பட்டி

மதுரை மாவட்டம் கணக்கன்பட்டியில் பா,திவிழா நடைபெற்றது. ஊராட்சிமன்றத் தலைவர் எஸ். பி.அருணுசலம் விழாவைத் துவக்கி வைத்தார். "தீக்கதிர்" துணை ஆசிரியர் தோழர் ஐ. மாயாண்டி பாரதிதலைமையில் நடைபெற்ற கருத்தங்கில், ஆர். ராஜேந்திரன், டி. ராமராஜ் ஆகியோரும் மற்றும் பலரும் உரையாற்றினர். செம்மலர்ச்செல்வன் தலைமையில் நடந்த கவியரங்கில் பி. ராஜன், கே. காளிமுத்து, மதுரைவீரன், பிச்சைமுத்து, எஸ். கணேசன் ஆகியோர் கலந்து கொண்டனர். அன்று காலையில் விளையாட்டுப்போட்டியும், ஐ மாயாண்டி பாரதி தலைமையில் "புழுதிமலர்" கைப்பிரதி வெளியீட்டு விழாவும் நடைபெற்றன.

## குடியாத்தம், ஆரணி, பொன்னை

வடஆற்காடு மாவட்டம் குடியாத்தத்தில் செப். 17-ல் பாரதி விழா நடைபெற்றது. ஆடலரசன் தலைமைவகித்தார். கமலாலயன் சம்பத்குமார், புவியரசு, கவிதைவாசித்தனர். கவியரங்கத்திற்கு கனிக்கோபன் தலைமை ஏற்ருர். சு. சம்பத்குமார் தலைமையில் நடந்த கருத்தரங்கில் எம். எஸ். இளங்கோ, வழக்கறிஞர் ஜி. சி. கோதண்டம், கிரீசம் ஆகியோர் கருத்துரையாற்றினர். மற்றும் இம்மாவட்டத்தில் ஆரணி, பொன்னை ஆகிய ஊர்களிலும் பாரதிவிழா நடைபெற்றது.

# கைது செய்யப்பட்ட சுதந்திரப் போராட்ட வீரர் திரும்பி வரவில்லை

தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த சுதந்திரப் போராட்ட வீரர் ராஜமாணிக்கம். மாவட்டப் போலீஸ் அதிகாரியின் (டி. எஸ். பி.) உத்தரவின் பேரில் ஆகஸ்ட் 24-ம் நாளன்று தனது வீட்டிலிருந்து கைது செய்து கொண்டு போகப்பட்ட இவர், மறுபடி திரும்பி வரவில்லை — என்று அவரது மனைவி ராக்கம்மாள், சென்னை உயர்நீதிமன்றத்தில் 'ஹேபியஸ் கார்பஸ்' மனு சமர்ப்பித்திருக்கிருர்.

போலீஸ் காவலில் வைக்கப்படுவதற்கு முன்பு தன் கணவன் சுதந்திரப் போராட்ட வீரர் பட்டயத்திற்காக ஆர். டி. ஓ. அதிகாரியைச் சந்தித்திருப்பதாகவும், போலீஸார் அவரைக் கடுமையாகத் தாக்கியதாகவும்ராக்கம்மாள் தனது மனுவில் கூறியிருக்கிருர்.

ராஜமாணிக்கம் காணுமற்போனது குறித்து போலீஸ் தரப்பிலும், ரெவின்யூ அதிகாரிகள் தரப்பிலும் உள்ள எல்லா குறிப்புகளையும் தாக்கல் செய்யும்படி அரசாங்கத்திற்கு உயர்நீதிமன்றம் உத்திர விட்டுள்ளது.

ராஜமாணிக்கத்தின் — மனைவி ராக்கம்மாள் சமர்ப்பித்த ஹேபியஸ் கார்பஸ் மனு மீது செப்டம்பர் 2௦-ல் நடந்த விசாரணையைத் தொடர்ந்து உயர்நீதிமன்றம் இந்த உத்தரவிட்டுள்ளது.

ஆகஸ்ட் 24-ல் ராஜமாணிக்கம் கைது செய்யப்பட்டார் என்பதை போலீஸ் அதிகாரி டி. எஸ். பி. மதுரம் தனது எதிர் சத்திய வாக்குமூலத்தில் ஒப்புக் கொண்டார். ஆனுல், அதே நாளில் போலீஸ் காவலிலிருந்து ராஜமாணிக்கம் தப்பி ஓடி விட்டாராம். அவரைக் "கண்டு பிடிப்பதற்கான" முயற்சிகள் வெற்றி பெறவில்லையென்றும் டி. எஸ். பி. கூறியிக்கிருர்.

இவரது விளக்கமும், ஏனைய போலீஸ் அதிகாரிகள் சமர்ப்பித்த எதிர் சத்திய வாக்குமூலங்களும் திருப்திகரமாகஇல்லை என்று மனுதாரர் ராக்கம்மாளின் வழக்கறிஞர் கூறினுர். போலீஸ் ஐ. ஜி., மாவட்டக் கலெக்டர் உள்பட பல அதிகாரிகளுக்கு ராக்கம்மாள் புகார் மனுக்கள் அனுப்பியிருந்த போதிலும், அவை ஒன்றுக்கும் பதில் வரவில்லை. ராஜமாணிக்கத்தைக் கண்டு பிடிக்க விசாரணை நடத்தப்பட்டதென்று அதிகாரிகள் சொல்லியிருந்தபோதிலும் விசாரணையின் முடிவு குறித்து மனுதாரருக்கு அறிவிக்கவில்லை. ஆகவே, விசாரணை நடத்தியது பற்றிய குறிப்புகளையும் நீதிமன்றத்தில் சமர்ப்பிக்குமாறு கோரவேண்டுமெனவும் ராக்கம்மாளின் வழக்கறிஞர் கோரியிருக்கிருர். நீதிமன்றம் இந்தக் கோரிக்கையை ஏற்று உத்தரவிட்டுள்ளது.

அல்லிநகரத்தில்

## மாதர் சங்கம் அமைப்பு

பெரியகுளம் தாலுகா அல்லிநகரத்தில் 21—9—77ல் ஜனநாயக மாதர் சங்க கிளை அமைப்புக் கூட்டம் தோழர் போடி பாக்கியம் தலைமையில் நடந்தது. 30 பெண்கள் கலந்து கொண்டனர்.

கிளைத்தலைவராக பாப்பாவும் செயலாளராக காமாட்சி அம்மாளும் மற்றும் நான்கு பேர் நிர்வாகக்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## சிஐடியூவுடன் இணைந்தது

புதுக்கோட்டை மாவட்டம் குண்ணண்டார் கோவிலில் உள்ள நெரும்பலம் சாமியப்பா அன்னபூரணி வேஸ்ட் காட்டன் மில் தொழிலாளர்கள் 100 பேர் சிஐடியூவுடன் இணைந்து விட்டனர். கடந்த 13ந்தேதி தோழர். பெரி. குமாரவேல் தலைமையில் நடந்த தொழிலாளர் பேரவைக் கூட்டத்தில் திருச்சி ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் கிளைச் சங்கமாகச் செயல்படுவது என்று தீர்மானிக்கப்பட்டு தலைவராக பெரி. குமாரவேலும், செயலாளராக என். லெட்சுமணனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

குறைந்த சம்பளம் மட்டுமே பெற்று வரும் இத்தொழிலாளர்களுக்கு சட்டப்படியான எந்த உரிமையும் அளிக்கப்படுவதில்லை.

## நாடு முழுதும் 3 இலட்சம் பேர் பங்கேற்ற

# வங்கி, காப்பீட்டு ஊழியர்களின் பொது வேலை நிறுத்தம்

கடந்த 27—9—77-ந் தேதியன்று தத்தம் கோரிக்கைகளை வலியுறுத்தி, காப்பீட்டு ஊழியர்களும் வங்கி ஊழியர்களும் நாடு முழுவதும் அடையாள பொது வேலை நிறுத்தம் செய்தனர்.

### இரண்டரை லட்சம் வங்கி ஊழியர்கள்

தொழிற்சங்க உரிமைகள், ஊதிய உயர்வு, போனஸ் ஆகிய கோரிக்கைகளை வலியுறுத்தி நாடு முழுதும் உள்ள சுமார் இரண்டரை இலட்சம் வங்கி ஊழியர்கள் வேலைநிறுத்தம் செய்தனர்.

ரிசர்வ் வங்கி ஊழியர்கள் சங்கம், அகில இந்திய வங்கி ஊழியர் சங்கம் ஆகியவை விடுத்த அறைகூவலுக்கிணங்க இந்த வேலைநிறுத்தம் நடந்தது.

''ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் 1974 ஜனவரி 24ம் தேதிய ஒப்பந்தப்படி, 1975–76, 1976–77 ஆகிய இரு ஆண்டுகளுக்கும் 15 சதவீத போனஸ் உடனே வழங்கக் கோரியும் இந்திராகாந்தி ஆட்சியின் நெருக்கடி காலத்தில் ஊழியருக்கு எதிராக எடுக்கப்பட்ட பழிவாங்கும் நடவடிக்கைகள் மற்றும் அத்துமீறல்களைத் திரும்பப்பெறக் கோரியும் நாடு முழுவதிலுமுள்ள 45 ஆயிரத்துக்கு மேற்பட்ட காப்பீட்டுக் கழக ஊழியர்கள் கடந்த 27-9-77ல் ஒருநாள் வேலை நிறுத்தம் செய்தனர். அனைத்திந்தியகாப்பீட்டு கழக ஊழியர் சங்கத்தின் அறைகூவலின் பேரில், முழு அளவிலான – நாடு தழுவிய இந்த வேலை நிறுத்தம் நடைபெற்றது. பொதுக்காப்பீட்டுத் துறையிலும் சங்கங்களுடன் நிர்வாகம் ஒத்துக்கொண்ட 15 சதவீத போனஸ் வழங்கப்படாததால் பொதுக்காப்பீட்டு ஊழியர்களும் இந்த வேலை நிறுத்தப் போராட்டத்தில் கலந்து கொண்டனர்.

பொதுக்காப்பீட்டு நிர்வாகம் தன்னிச்சையாக ஊழியர்களின் வைப்புநிதித் திட்டத்தை மாற்றியமைத்ததற்குக் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. மீண்டும் முன்போல் மொத்த ஊதியத்தில் பத்து சதவீதம் வைப்பு நிதியாக அமைக்கும்படி வலியுறுத்தப்பட்டது.

### போராட்டமேன்?

மத்தியில் ஜனதா கட்சியின் ஆட்சி அமைந்தவுடன் அனைத்திந்தியக் காப்பீட்டு ஊழியர் சங்கத் தலைவர்கள் மத்திய நிதி அமைச்சரை சந்தித்து ஆயுள்—பொதுக்காப்பீட்டு ஊழியர்களின் பிரச்னைகளை விரிவாக எடுத்துரைத்தனர். கோரிக்கைகளைப் பரிசீலிக்க அரசுக்கு ஆறு வார கால அவகாசம் அளிக்குமாறு நிதியமைச்சர் கேட்டுக்கொண்டதற்கிணங்க. ஆயுள் மற்றும் பொதுக்காப்பீட்டு நிறுவனங்களின் அதிகார வரம்பிற்குட்பட்ட பிரச்னைகளைத் தீர்க்குமாறு கோரி ஊழியர்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தனர். நெருக்கடி காலத்தில் ஆயுள் காப்பீட்டுக் கழக (ஒப்பந்த மாற்றச்) சட்டத்தின் மூலமாக எல். ஐ. சி. ஊழியர்களின் போனஸ் உரிமை பறிக்கப்பட்டது. மார்ச் 1977ல் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தல் பிரசாரத்தின் போது அன்றைய ஜனதா கட்சித் தலைவர்கள் — இன்றைய மத்திய அரசின் அமைச்சர்கள்-தாங்கள் வெற்றிபெற்று ஆட்சிப் பொறுப்பேற்ருல் மேற்குறிப்பிட்ட சட்டத்தை ரத்துச் செய்து, ஆயுள் காப்பீட்டு நிறுவனத்தில் ஒப்பந்தப்படி ஊழியர்களுக்குப் போனஸ் வழங்குவோம் என்று உறுதியளித்தார்கள். ஆனால் இன்று மத்திய அரசானது மேற்படி அவசர காலச் சட்டத்தை ரத்துச் செய்வதை விட்டு, போனஸ் பிரச்சனையில் ஊழியர்களும், நிர்வாகமும் மீண்டும் ஆரம்பம் முதல் பேச்சு வார்த்தை நடத்த வேண்டுமென்று கூறி வருவருகிறது. 1974 ஜனவரி திங்களில் அன்றைய மத்திய நிதி மற்றும் தொழிலாளர் நல அமைச்சர்களின் முன்னிலையில் நடைபெற்ற பேச்சு வார்த்தைகளின் பயனுகக் கையெழுத்திடப்பட்டு, மத்திய அரசினுல் அங்கீகரிக்கப்பட்டு, இரண்டு ஆண்டுகள் அமுல் படுத்தப்பட்ட இருதரப்பு ஒப்பந்தத்தைக் குறித்து 'மீண்டும் பேச்சு வார்த்தை நடத்துங்கள்'' என்று இன்றைய மத்திய அரசு கூறுவது ஊழியர்களுக்கு வேதனையளிப்பதா

அரசின் காலந்தாழ்த்தும் போக்கால் இந்திய தலைமை நீதிமன்றத்தில் அனைத்திந்திய காப்பீட்டு ஊழியர் சங்கம் தொடர்ந்துள்ள போனஸ் வழக்கும் நவம்பர் 1976 முதல் ஒத்தி வைக்கப்பட்டே வந்துள்ளது.

### உறுதியுடன் போராடுவோம்

ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் ஒப்பந்தப்படியும், பொதுக்காப்பீட்டுக் கழகத்தில் நிர்வாகம் ஒத்துக்கொண்டபடியும் 1975-76, 1976-77 ஆண்டுகளுக்கு 15 சத வீத போனஸ் பெற்றே தீருவோம் என்று ஆயுள்– பொதுக் காப்பீட்டு ஊழியர்கள் உறுதி கொண்டுள்ளனர். இந்தஉறுதியுடன் இறுதிவரை போராடுமாறு ஆயுள்–பொதுக்காப்பீட்டு அலுவலகங்களின் முன்பும் நடைபெற்ற ஆர்ப்பாட்டங்களின் போது ஊழியர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டனர். பொதுக் காப்பீட்டு அலுவலகத்தின் முன் நடைபெற்ற கூட்டத்தில் மதுரை-இராமநாதபுரம் மாவட்ட வங்கி ஊழியர் சங்கத் தலைவர் தோழர். கே. கோபாலகிருஷ்ணனும், தேசீய ஆயுள் காப்பீட்டு ஊழியர் கூட்ட அமைப்பின் துணைத் தலைவர் தோழர். சீதாராமாராவும், காப்பீட்டுக் கழக ஊழியர் சங்கத் துணைத் தலைவர் தோழர். எஸ். தண்டபாணியும் வேலை நிறுத்தப் போராட்டத்தை ஆதரித்து உரையாற்றினர்.

ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் 21 ஆண்டு வரலாற்றில் இன்று முதல்முறையாக செல்லூரிலுள்ள அதன் பகுதி அலுவலகமும், மதுரை, நகரிலுள்ள மூன்று கிளை அலுவலகங்களும் மூடிக் கிடந்தன.

---

### வீட்டுவரி உயர்வுக்கு எதிர்ப்பு

செங்கோட்டையில் வீட்டுவரி உயர்வை எதிர்த்தும், வியாபாரிகளுக்கு பலவித வரிகள் போடப்பட்டுள்ளதை எதிர்த்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் மற்றும் அதன் சார்பு வெகு ஜன ஸ்தாபனங்களும் கடந்த 22ந்தேதி ஆர்ப்பாட்டம் நடத்தி நகரசபை அதிகாரியிடம் மகஜர் கொடுக்கப்பட்டது. மின்வாரியத்தின் செயல் பாடுகளில் உள்ள குறைபாடுகளால் பொது மக்களுக்கு ஏற்படும் அசௌகரியங்களைக் களையக் கோரி மின் வாரிய அதிகாரிகளுக்கு ஒரு மகஜர் அளிக்கப்பட்டது.

செங்கோட்டை குண்டாறு நீர்த்தேக்கத்தை கட்டுதல், மேக்கரை விவசாயிகள் மீது வன இலாகாவினரால் போடப்பட்டுள்ள வழக்குகளை வாபஸ் பெறுதல் ஆகிய கோரிக்கைகளை வலியுறுத்தியும், சென்னை டி.வி.எஸ், கோவை லெட்சுமி மிஷன்தொழிலாளர்களுக்கு நியாயம் வழங்கக் கோரியும் வட்டார ஆட்சித் தலைவரிடம் மகஜர் அளிக்கப்பட்டது.

### துறையூரில்

கடந்த 5 ஆண்டு காலமாக வறட்சியால் அவதிப்படும் துறையூர் மக்கள் மீது —வசதிகள் எதுவும் செய்து தராமலேயே— நகராட்சி நிர்வாகம் வீட்டு வரியை உயர்த்தியிருப்பதை எதிர்த்து 27—9—77 ந்தேதியன்று பஸ்ஸ்டாண்டு முன்பு அடையாள உண்ணுவிரதம் நடந்தது. பலர் பங்கேற்றனர். மார்க்சிஸ்ட் கட்சி, ஜனதா, சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி தலைவர்கள் வாழ்த்துரை வழங்கினர்.

### கடன் வசதி கோரி அரிஜன ஏழைகள் ஆர்ப்பாட்டம்

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள மேலூர் கிராம அரிஜன ஏழை மக்கள் தங்களுக்கு கறவை மாடுகள் வாங்கக் கடன் வழங்கக் கோரி புதுக்கோட்டை கனரா பாங்கு முன்பு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் பெரி. குமரவேல் என். லெட்சுமணன் தலைமையில் ஆர்ப்பாட்டம் செய்தனர். பின்னர் கலெக்டர் ஆபீஸ் முன்பும் ஆர்ப்பாட்டம் நடத்தி மகஜர் அளிக்கப்பட்டது. கலெக்டரின் ஆலோசனையின் பேரில், தனது பிரதிநிதி ஒருவரை கனரா வங்கி மேலாளர் அனுப்பி வைத்தார். அவர் விசாரணை நடத்தி, உடனே கடன் கொடுக்க ஏற்பாடு செய்வதாக உறுதி அளித்துச் சென்றுள்ளார்.

---

## உரிமைக்காகப் போராடும் லெட்சுமி மிஷன் தொழிலாளர்களை

# கைது செய்ததற்கு மார்க்சிஸ்ட்கட்சி கண்டனம்

கோவை லட்சுமி மிஷின் தொழிலாளர்களை கைது செய்துள்ளதைக் கண்டித்து, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் சார்பில் செயற்குழு உறுப்பினர் தோழர் கே. முத்தையா பத்திரிகைகளுக்கு கீழ்க்காணும் அறிக்கையினை 24—9—77ல் வெளியிட்டுள்ளார்:–

கோவை மாவட்டம் பெரியநாயக்கன் பாளையத்தில் உள்ள லட்சுமிமிஷின் ஒர்க்ஸ் எஞ்சினியரிங் நிறுவனத்தில் 2500க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் 2-6-77 முதல் தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராடி வருகிருர்கள்.

இந்நிறுவனத்தில் பணியாற்றும் 10 தொழிற்சங்கங்களில் 7 சங்கங்கள்—சிஐடியூ, அ.இ.தொ.ச.கா, உட்பட—கூட்டு செயல் கமிட்டி அமைத்து இந்தப் போராட்டத்தை நடத்தியது.

முதலாளிகள் வீடு முன்பு உண்ணுவிரதம், மாவட்டம் தழுவிய எஞ்சினியரிங் தொழிலாளர்கள் ஒரு நாள் ஆதரவு வேலை நிறுத்தத்திலும் ஈடுபட்டனர். இந்த நடவடிக்கைகளுக்குப் பின்னர் நிர்வாகம் பேச்சுவார்த்தைகளுக்கு இணங்கியது. தொழிற்சங்கத் தலைவர்களிடம் பேசியதைக் கூட நிர்வாகம் துணை லேபர் கமிஷனர் முன்பு பேசும்போது ஒத்துக்கொள்ளவில்லை. ஆனுல் நிர்வாகம் துணை லேபர் கமிஷனரிடம், தான் ஏற்றுக்கொண்ட நிபந்தனைகளை வைத்து, வேலை நிறுத்தத்தில் இருந்து ஒதுங்கியிருந்த சங்கங்களுடன் ஓர் ஒப்பந்தத்தை செய்தது. தொழிற்சங்கக் கூட்டுக்கமிட்டியும் பெருவாரியான தொழிலாளர்களும் ஒப்பந்தத்தை ஒத்துக்கொள்ளவில்லை.

அனைத்துத் தொழிலாளர்களும் ஆலைக்குள் சென்று வேலைநிறுத்தம் செய்தனர். தங்களுக்கு நியாயம் வழங்கப்படவில்லை என்று கருதுகிருர்கள்.

இந்தச் சூழ்நிலையில் 28-9-77 அன்று உண்ணுவிரதம் இருக்கச் சென்ற தொழிலாளர்கள், உண்ணுவிரதத்தை ஆரம்பித்து வைக்கச் சென்ற தொழிற்சங்க தலைவர்கள் உள்ளிட்டு, 443 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

29-9-77ம் தேதியன்று காலை நிர்வாகம் நியாயமற்ற முறையில் 1259 தொழிலாளர்களை சஸ்பென்ட் செய்துள்ளது. நிர்வாகத்தின் இந்தச் செயலைக் கண்டித்து மறியல் செய்த தொழிலாளர்கள் 129 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். நிர்வாகத்தின் தாக்குதலுடன் சேர்ந்து போலீசார் தொழிலாளர்கள் மீது நடவடிக்கை மேற்கொள்வது அத்துமீறிய செயலாக உள்ளது.

ஒரு தொழில் தாவாவில் இருசாராரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒப்பந்தம் ஏற்படுவதற்கு தொழிலாளர் இலாகா முயற்சிக்காமல், மைனுரிட்டி சங்கங்களுடன் ஒப்பந்தம் செய்து, பெருவாரியான தொழிலாளர்கள்மீது திணிப்பது ஜனநாயக நடைமுறைகளுக்குப் புறம்பானது. தொழில் அமைதியை உத்திரவாதம் செய்யாது.

ஒப்பந்தத்தைத் திருத்த சுமுகமான தீர்வு காண பேச்சு வார்த்தை நடத்துவதற்கு பதிலாக, உண்ணுவிரதம் இருந்த தொழிலாளர்களை கைது செய்வது, கண்டிக்கத் தகுந்தது. இவ்வாறு தொழிற் தகராறில் மைனுரிட்டி ஒப்பந்தத்தைத் திணித்து ஏற்றுக் கொள்ளாத தொழிலாளர்களைக் கைது செய்து அடக்குமுறை ஏவிவிடப்பட்டிருப்பதை சகல ஜனநாயக வாதிகளும், தொழிற்சங்கங்களும் கண்டிக்க வேண்டும் என வேண்டுகிரோம். தமிழக அரசு, இந்தத் தவருன முறையைக் கைவிட்டு தொழிலாளர்களை விடுதலை செய்து, மைனுரிட்டி ஒப்பந்தத்தை ரத்து செய்து, சகலரும் ஏற்கும் நியாயமான தீர்வை ஏற்படுத்த வற்புறுத்துகிரோம்.

---

### பழி வாங்கலை எதிர்த்து போராட்டம்

நிர்வாகத்தின்பழி வாங்கும் போக்கை எதிர்த்து, கோவில்பட்டி லயன் பஸ் டிரான்ஸ்போர்ட் தொழிலாளர்கள் போராடி வருகிருர்கள். போராட்டத்தின் ஒருகட்டமாக செப். 22 முதல் 25 முடிய தொடர் உண்ணுவிரதம் இருந்தனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்ட உதவிச் செயலாளர் எம். பாண்டியன் துவக்கி வைத்தும், நகர்ச் செயலாளர் தோழர் பி. சங்கரப்பன் முடித்து வைத்தும் பேசினர். தொலைபேசித்தொழிலாளர் சங்கம், மாதர் சங்கம், சிஐடியூ சங்கங்கள், வாலிபர் முன்னணி, லெனின் மன்றம் ஆகியவற்றின் சார்பில் ஆதரவும் வாழ்த்தும் தெரிவிக்கப்பட்டன.

# மாணவர்கள் கோரிக்கை

இரா. நாராயணன்

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள கல்லூரிமாணவர்கள் இன்றைக்கு போராட்டங்களில் இறங்கியுள்ளனர்.

அரசியல் உரிமைகளையும் பிரஜா சுதந்திரங்களையும் பறித்து இந்திய நாடு முழுவதையும் ஒரு பரந்த திறந்த வெளிச் சிறைபாக மாற்றி வைத்திருந்த இந்திரா காந்தியின் ஆட்சியில் அடங்கிக் கிடந்த மக்களது உரிமைப் போராட்ட அலைகள் மீண்டும் வீசத்துவங்கிவிட்டன. அடக்கி வைக்கப்பட்டிருந்த குறைகள் கோரிக்கைகள் பற்றிய உணர்வுகள் மீண்டும் வெளிக்கிளம்பி செயல்வடிவம் பெறுகின்றன.

## மாணவர்கள் விதி விலக்கா?

கருத்தாலும் கரத்தாலும் பாடுபடும் உழைப்பாளிகளின் உரிமைப் போராட்டங்கள், ஆசிரியர்களது போராட்டங்கள், வங்கி-காப்பீட்டு ஊழியர்களது போராட்டங்கள் கிராமப்புற மக்களின் உரிமைக் கிளர்ச்சிகள்-இப்படி சமுதாயத்தின் பல்வேறு பிரிவு மக்களும் தங்களது உரிமைகளுக்கான போராட்டங்களில், கோரிக்கைகளுக்கான கிளர்ச்சிகளில் ஈடுபடும் பொழுது, அந்தச்சமுதாயத்தின் ஒரு பிரிவினரான—இளைய தலைமுறையினரான மாணவர்களும் இளைஞர்களும் மட்டும் எப்படி விதிவிலக்காக முடியும்? முடியாது.

மாணவர்களுக்கு கல்வி சம்பந்தமான பிரச்னைகள், பல நீண்டநாள் பிரச்சினைகள் உண்டு. கல்லூரி, விடுதிகளில் குறைந்தபட்ச தேவையான வசதிகள், மற்றும் பொருளாதார ரீதியான பிரச்னைகள் ஆகியவை உள்ளன. அப்பிரச்னைகள் தீர்க்கப்படாத பட்சத்தில்-அல்லது அது சம்பந்தமாக அரசு, தனியார் கல்லூரி நிர்வாகிகளிடமிருந்து அதிகாரிகளிடமிருந்து திருப்தியளிக்கக் கூடிய பதில்களோ நடவடிக்கைகளோ எதுவும் இல்லாத சூழ்நிலையில் மாணவர்கள் போராட்டங்களில் ஈடுபடும் நிர்ப்பந்தத்தில் தள்ளப் படுகின்றனர். அத்தகைய நிலைதான் இன்று மாணவர்களைப் பொறுத்தளவில் நிலவுகிறது.

## பழைய வடிகட்டும் முறையே 'செமஸ்டர்'

இன்று மாணவர்களது போராட்டங்களில் முதன்மையாக நிற்பது "செமஸ்டர்" பிரச்னை. இச்செமஸ்டர் புகுத்தப்படுவதன் மூலம் கல்வித் துறையில் பிரம்மாண்டமான சாதனையை — பெரும் பயன்தரத் தக்க மாறுதலை செய்து விட்டதாக ஒரு தோற்றத்தை-பிரமையை நாடு முழுவதும் ஏற்படுத்த, கல்வித்துறை அதிகாரிகளும் பல்கலைக் கழகத் துணைவேந்தர்களும் பகீரத முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

உண்மை இதுதான் என்னுல், மாணவர்கள் ஒரே குரலில் எதிர்க்க வேண்டிய அவசியம் என்ன?

பாடங்களைப் போதிக்கும் பல ஆசிரியர்கள் முணுமுணுப்பும் எதிர்ப்பும் தெரிவிக்க வேண்டிய கட்டாயம் ஏன்?

உண்மை இதுதான்—

செமஸ்டர் என்பதுமேலைய முதலாளித்துவ நாடுகளிடமிருந்து இறக்குமதி செய்யப்பட்டுள்ள ஒருமோசடிச்சரக்கு, மோசமான கல்வி முறை. சுருங்கக்கூறின், ஏற்கனவே இருந்த 'வடிகட்டும்' முறையின் மறுபதிப்பு இது.

அதுமட்டுமல்ல—

மாணவர்களுக்கு கல்விச் சுமையைக் கூடுதலாக்கியுள்ளது. கல்விச் சுமையைக் குறைத்து சமுதாய வாழ்க்கை துறைகளில் அதிக அனுபவத்தை மாணவர்களுக்கு ஊட்ட வேண்டுமென்று மத்திய கல்வி அமைச்சர் சுந்தர் கரடியாகக் கத்துகிற அதே சமயத்தில், இந்தப்பளு சுமத்தும் வேலை இங்கே நடக்கிறது. தேர்வுக் கட்டணம் போன்ற பொருட்செலவை கிட்டத்தட்ட இரட்டிப்பாக்கியுள்ளது. ஆசிரியர்களுக்கோ வேலைப்பளுவை கடுமையாக்கியுள்ளது. பல ஆசிரியர்கள் வேலையிலிருந்து வெளியே அனுப்பப்படும் நிலையும் உருவாகியுள்ளது. எவ்வித பிரயோஜனமும் ஏற்படுத்தப் போவதில்லை இப்புதிய கல்வி முறை. ஆகவேதான் மாணவர்கள் கல்லூரிகளை விட்டு வெளியேறி நடுத்தெருவுக்கு வந்து தங்களது எதிர்ப்புக்களைத் தெரிவித்து வருகின்றனர். வேலைநிறுத்தப் போராட்டங்களில் ஈடுபடுகின்றனர்.

அவர்களது இப்போராட்டம் நியாயமான ஒன்று. இதில் மையமாக உள்ள பிரச்னையும் நியாயமானது.

எனினும் கோரிக்கையும் போராட்டமும் நியாயமானது என்பது மட்டும் போதாது. சமுதாயத்தில் உள்ள பெரும் பகுதியினருடைய ஆதரவையும் பெறுவதன் மூலம் மட்டுமே அரசையும் அதிகாரிகளையும் நிர்ப்பந்தித்து கோரிக்கைகளை வெல்ல முடியும். மாணவர்களது போராட்டத்துக்கு தொழிலாளர்கள், விவசாயிகள், மற்றும் நடுத்தர மக்கள் ஆகியோரது ஆதரவைப் பெற வேண்டியது மிகமிக அவசியமானதாகும்.

## நல்லுறவு வளர .....

ஆனல் இன்று மாணவர்களது போராட்டங்கள் சில சமயங்களில் மாணவர்களுக்கும் ஏனைய சில பகுதி மக்களுக்கும் குறிப்பாக தொழிலாளர்களுக்கும் இடையேயான கசப்பான அனுபவமாக உள்ளது.

அதிலும் குறிப்பாக பஸ் தொழிலாளர்களுக்கும் மாணவர்களுக்குமிடையே எந்த கைய உறவு நிலவுகிறது!

மாணவத் தோழர்களே! சற்றே சிந்தித்துப் பாருங்கள். தொழிலாளர்கள் யார்? நமது சகோதரர்கள்தானே? ஏன் இன்னும் சொல்லப் போனல் நமது தந்தையாகவோ, அண்ணன், தம்பி போன்ற உறவினர்களாகவோ தானே இருப்பர்.

மாணவர்கள் என்பவர்கள் யார்? நமது பிள்ளைகள் தானே? சகோதரர்கள் தானே? இதைத் தொழிலாளர்கள் பார்க்கத் தவறக்கூடாது.

மாணவர்களும் தொழிலாளர்களும் தனித்தனிப் பகுதியினர் அல்லவே. தனிப்பட்ட முறையில் பிரச்னைகளைத் தீர்த்துவிடமுடியுமா?

நாம் வாழுகின்ற இந்த முதலாளித்துவ— நிலப்பிரபுத்துவ சமுதாயத்தில், ஆளும் வர்க்கங்களுக்கு சாதகமாக எடுக்கப்படும் ஒவ்வொரு நடவடிக்கையும் மக்களைப் பாதிக்கின்றன. மாணவர்களையும் தொழிலாளர்களையும் ஏனைய சகல பகுதி மக்களையும்தானே பாதிக்கின்றன.

ஆகவே, ஒருவருக்கொருவர்—சக பகுதியினரிடையேயும் சகோதர நல்லுறவு ஏற்படுத்துவதன் மூலமே—இந்த பாதிப்புகளைச் சமாளிக்க முடியும்.

ஆகவே இந்த சகலபகுதியினரிடையேயான நல்லுறவு எப்படி உருவாகும்?

அவ்வப் பொழுது ஏற்படும் பிரச்னைகளில் ஒருவருக்கொருவர் ஆதரவு அளிப்பதன் மூலம் அப்பிரச்னைகளுக்காக நடக்கும் போராட்டங்களில் ஒருவருக்கொருவர் சகோதர ஆதரவு அளித்து பங்கெடுப்பதன் மூலம் தானே உறவு ஏற்பட்டு வளர முடியும் வலுப்பெறமுடியும். எத்தகைய பிளவு சக்திகளாலும் பிரிக்க முடியாத - உடைக்கமுடியாத ஒரு மாபெரும் ஒற்றுமைச் சக்தியை உருவாக்கிட முடியும்.

கூலி உயர்வு, பஞ்சப்படி உயர்வு, போனஸ், படித்தவருக்கு வேலை, பழிவாங்கலுக்கு எதிர்ப்பு ஆகியவற்றுக்காக ஆலைத் தொழிலாளர்கள் போராட்டமா? பஸ் தொழிலாளர்கள் போராட்டமா? அங்கே மாணவர்களது ஆதரவுக் குரல் ஒலிக்க வேண்டாமா?

கல்லூரி விடுதிக் கட்டணஉயர்வு, செமஸ்டர் எதிர்ப்பு, பழிவாங்கல் எதிர்ப்பு, மாணவர் அமைப்புகளுக்குத் தேர்தல், சங்கம் அமைத்துக் கொள்ளும் உரிமை ஆகியவற்றுக்காக கல்லூரி மாணவர்களது கிளர்ச்சிகளா? அது நியாயமானது என்று கூறி தொழிலாளர்கள் ஆதரவுக் குரல் எழுப்ப வேண்டாமா?

## சமுதாயப் பிரச்னை

அதேபோன்று, வேலை வாய்ப்புப் பிரச்னை.

இது இன்று சமுதாயத்தில் உள்ள அனைத்துப் பிரிவு மக்களையும் பாதித்து நிற்கக் கூடிய உடனடிப் பிரச்னை.

பொறிமயமாக்கல், நவீனமயமாக்கல் என்ற பெயரால் வேலையில் இருப்போர் வெளியேற்றப்படுதல், தற்காலிகமாகத் தந்த வேலைகளையும் பறித்தல், புதியவேலை வாய்ப்பு இல்லாது இலட்சக்கணக்கான பட்டதாரிகள் அலைக்கழிக்கப் படுதல்; கோடிக்கணக்கான மக்கள் நடுத் தெருவில்; நமது எதிர்காலம் என்னவாகுமோ என்று மாணவர்கள் அதிருப்தியடைந்திருத்தல் — இப்படி அனைத்துப் பகுதியினரையும் குலுக்கிக் கொண்டிருக்கும் ஒரு சமுதாயப் பிரச்னையாக உள்ளது

## ஒன்றுபட்டுச் செயல்படுக

இதுபற்றியெல்லாம்சிந்தியுங்கள். இந்த அவல நிலைக்கு யார் காரணம்? என்பது பற்றி யோசியுங்கள். அடிப்படைக் காரணமென்ன என்பது குறித்து ஒருவருக்கொருவர் கலந்தாலோசியுங்கள். விவாதியுங்கள். முடிவெடுத்துச் செயலாற்றுங்கள்.

அதை விடுத்துவிட்டு நமக்குள்ளேயே சண்டை சச்சரவுகள்—மோதல்கள் ஏன்?

ஆளும் கட்சி —எதிர்க்கட்சி என்ற அடிப்படையில் மாணவர்கள் பிளவுபட்டு மாணவர் ஒற்றுமை சீர்குலைய அனுமதிப்பது ஏன்?

இதைச் சாக்காகப் பயன்படுத்தி மாணவர்களிடையே பிளவுகளை ஏற்படுத்தி—அதை விரிவாக்குகின்றனர் சிலர். இதற்கு கல்வித்துறை அதிகாரிகளும் ஊக்கமளிக்கின்றனர்.

இதன் மூலம் கோரிக்கை கைநழுவுகிறது. அடிப்படைப் பிரச்னைகளிலிருந்து திசை திருப்பப்படுகிறது. மாணவர்கள் தங்களுக்குள் ஒற்றுமை, அடுத்து தொழிலாளர்கள், விவசாயிகள் போன்ற சமுதாயத்தின் ஏனைய பிரிவு மக்களிடையே நல்லுறவு— இவற்றை வளர்த்து, இந்தச் சமுதாயத்தினை சீரழித்துவரும் அடிப்படைக் காரணத்தைக் கெல்லிஎறிய முன்வர வேண்டும்.

உடனடியாக செமஸ்டர் முறையை ஒழிப்பதில் வெற்றி காணவும். கல்வித் துறையில் அடிப்படையானமாறுதலை ஏற்படுத்தவும், வேலை பெறுவதை அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைகள் பட்டியலில் சேர்க்கவும், வேலை வாய்ப்பு அல்லது அதுவரை உதவித் தொகைபெறவும் ஒன்றுபட்ட இயக்கமும் போராட்டமும் நடத்த அனைத்து மாணவர்களும் ஓரணியில் திரள வேண்டும்.

---

# வருமானம்...

(8-ம் பக்க தொடர்ச்சி)

செயல்படுத்துவது என்பது, ஏகபோகங்கள், பெருமுதலாளிகள் நிலப்பிரபுக்கள், வர்த்தகச் சூதாடிகள் இவர்கள் ஒரு புறமும் — உழைக்கும் வர்க்கம், விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், மத்தியதர வர்க்க ஊழியர்கள் இவர்கள் மறுபுறமுமான சகல பிரிவினரின் வருமான ஏற்றத் தாழ்வுகளை குறைப்பதால் மட்டுமே சாத்தியமானது. சுரண்டும் வர்க்கத்தினரின் வருமானத்தைக் குறைப்பதற்கு அவர்கள் மீது தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்ளாதவரை மேற்கூறியது போன்ற ஒரு வருமானம்—ஊதியக் கொள்கை என்பது நினைக்க முடியாத ஒன்ருகும்.

இதற்காகவறுமைக்கோட்டிற்கு கீழே வாழும் 60 சதவீத மக்களுக்கு வாழும் வசதிகளை அளிக்கச் செய்யும் உழைக்கும் வர்க்கத்திற்கும்விவசாயத் தொழிலாளருக்கும் தேவையின் அடிப்படையிலான ஊதியம் கொடுப்பதற்கு காலவரையிடப்பட்ட திட்டம் அவசியம் என்றும் இம்மாநாடு வலியுறுத்துகிறது.

தேர்தல் அறிக்கையில் கண்டுள்ளபடி ஒரு வருமானக் கொள்கையை வரையறுக்கும்படி ஜனதா அரசாங்கத்தை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது. வருமானம்—ஊதியக் கொள்கையில் மேற்கூறிய முறையில் இணைந்து உறுதியாக செயலாற்றவும் கொள்கையை ஒப்புக்கொள்ளச் செய்வதற்கு அரசாங்கத்துடன் பேச்சுவார்த்தை நடத்தவும் மத்திய தொழிற்சங்கங்களையும் தேசிய கூட்டமைப்புகளையும் இம்மாநாடு வேண்டுகிறது.

---

வலது கம்யூ.விலிருந்து

# தேனி நகரச் செயலாளர் விலகல்

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தேனி நகரச் செயலாளர் இரா. பாண்டியன் அக்கட்சியிலிருந்து ராஜினுமாச் செய்து விட்டார். இவர் பெரியகுளம் உத்தமபாளையம் தாலுகாக்குழு உறுப்பினராகவும் இதுவரை இருந்து வந்துள்ளார்.

அக்கட்சியின் நகரச்செயலாளராக 9 ஆண்டுக் காலம் இருந்துவந்த தோழர் பாண்டியன், இப்போது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியில் சேர்ந்து செயல்பட விருப்பம் தெரிவித்து விண்ணப்பித்துள்ளார்.

வலது கம்யூனிஸ்ட் கட்சி மார்க்சீயத்துக்கு முரணுகச் செல்கிறது என்றும், ஆகவே, உழைப்பாளி வர்க்கத்திற்காக உறுதியுடன் போராடும் மாற்று கொள்கையை வைத்து மக்களைத் திரட்டிவரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து சிறப்பாக பணியாற்ற விரும்புவதாகவும் அவர் தமது விண்ணப்பத்தில் குறிப்பிட்டுள்ளார்.

 9-10-77

# வெங்கடாசலம் கடத்தி கொலை செய்யப்ப

## ★ நிலப்பிரபுகளுக்கு எதிராக விவசாயத் தொழிலாளர்களைத் திரட்டி இயக்கம் நடத்தினார் ★

## அரிஜனமக்களுக்கும் பக்கபலமாக நின்றார். ★ மார்க்சிஸ்ட்கட்சியையும், விவசாய இயக்கத்தையும்

கொத்தடிமைத்தனமும் கொடுங்கோன்மையும் கொடி கட்டிப்பறக்கும் தஞ்சை மாவட்டத்திலே, அரிசன விவசாயத் தொழிலாளர்களின் விடுதலைக்காகவும் பிற்பட்ட மக்களின் நல உரிமைகளுக்காகவும் வாழ்நாள் பூராவும் பாடுபட்ட—தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவரை—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவரை—தலைவர் என்று பொதுமக்களாலும், என். வி. என்று கட்சி ஊழியர்களாலும் அன்பாக அழைக்கப்பட்டு வந்த தோழர் என். வெங்கடாசலத்தை நிலப்பிரபுக்களும் அவர்களது அடியாட்களும் படுகொலை செய்து பழிதீர்த்து விட்டார்கள்.

தங்கள் அன்புத்தலைவனின் இக்கொலைச் செய்தி கேட்டு தஞ்சை மாவட்டம் முழுவதிலுமுள்ள விவசாயத் தொழிலாளர்கள் ஆத்திர ஆவேசத்துடன் கொதிக்கிறார்கள்.

### காவல்துறைக்கு ஒரு சவால்

இதுவரை உடல் கிடைக்கவில்லை. கிடைக்க முடியாத அளவுக்குச் செய்து விட்டு, ''எங்களுடைய சம்பிரதாயத்தை முடித்து விட்டோம்'' என்று வெங்கடாசலத்தின் வீட்டிற்கே தபாலும் எழுதியிருக்கிறார்கள்.

இந்தக் கொடுமையைக் கண்டித்தும், அரசாங்கம் உண்மையான கொலைகாரர்களைக் கண்டுபிடிக்க நடவடிக்கை எடுக்கக் கோரியும் 4—10—77 அன்று தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்து கண்டன ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தினார்கள். தமிழகத்தின் ஏனைய இடங்களிலும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தி குற்றவாளிகளை கண்டுபிடிக்கும்படி மகஜர்களும் சமர்ப்பித்துள்ளனர். தாலுகா தலைநகர்களில் அதிகாரிகளிடம் தங்களது ஆத்திரத்தையும் கோரிக்கையையும் வலியுறுத்தி மனுக்கள் கொடுத்தனர்.



தோழர் வெங்கடாசலம் படுகொலையை விவசாய இயக்க முன்னோடியான வீரன் களப்பால் குப்புவை விஷமிட்டுக் கொன்ற நிகழ்ச்சி போன்றதெனவும், வெண்மணியில் 44 அரிசன மக்களை ஒரு குடிசையில் வைத்து நெருப்பிட்டுப் படுகொலை செய்த கோர நிகழ்ச்சி போன்றதெனவும் எல்லோரும் கருதுகிறார்கள். தஞ்சை மாவட்டம் முழுவதும் லட்சோபலட்சம் மக்களின் அன்பாதரவைப் பெற்ற ஒரு தலைவரை கொலை செய்து விட்டு தப்பிவிடலாமென்று கருதுபவர்கள், மாநில அரசின் காவல்துறைக்கே சவால் விட்டிருக்கிறார்கள். விவசாயிகள் இயக்கத்திற்கே சவால் விட்டிருக்கிறார்கள்.

### தீக்கதிர் சிறப்பு நிருபர்

தோழர் ஜி. வீரய்யனுடன் கொலை பற்றிய விபரங்களை அறிய, தீக்கதிர் உதவி ஆசிரியர் ஐ. மாயாண்டிபாரதி அனுப்பப்பட்டார். அவர் திருவாரூரிலுள்ள தஞ்சை மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அலுவலகத்திற்குச் சென்று, கட்சியின் செயலாளர் தோழர் ஜி. வீரய்யனைப் பேட்டி கண்டார் அவர் தோழர் என். வெங்கடாசலத்தின் போராட்ட வரலாறுகளையும், கொலையின் பின்னணியையும் விளக்கிக் கூறினார். அவர் தெரிவித்த விபரமாவது:

### சொரக்குடிபட்டி பெருமாள்

தஞ்சைத்தாலுகா வெண்டயம்பட்டி பஞ்சாயத்தில், இராயமுண்டான்பட்டி, சொரக்குடிபட்டி, வெண்டயம்பட்டி, புதுக்குடி என்ற கிராமங்கள் உள்ளன. இராயமுண்டான்பட்டியில் தோழர் வெங்கடாசலம் வீடு இருக்கிறது. சொரக்குடிபட்டியில் ஜானகிராமன் என்ற பெருமாள் வீடு இருக்கிறது இராயமுண்டான்பட்டிக்கு சோளகம்பட்டி ரயில் நிலையத்திலிருந்து தெற்கு நோக்கி ஓர் ஒற்றையடி மண்பாதை 3 கிலோ மீட்டர் தூரம் வரை உள்ளது. ரயிலை விட்டிறங்கி செல்பவர்களுக்கு, சிறிது தூரம் சென்றவுடன் வலப்புறமாக 2 பர்லாங் தூரத்தில் ஒரு தோப்பின் நடுவே ஒரு ஓட்டடுக்கு வீடு இருப்பதைக் காண முடியும் அது சொரக்குடிபட்டி மிராசுதார் பெருமாளின் ஓய்வு விடுதி. அதைச்சுற்றிலும் அவருக்கு வேண்டியவர்கள் வசிக்கிறார்கள். அந்த வட்டாரத்து நிலமெல்லாம் பெருமாள் மிராசுதாருக்குச் சொந்தம். அவருக்கு திருவரம்பூரில் சொந்தமாக வீடும் உள்ளது.

அவரது பண்ணை நிலங்கள் சீரங்கத்து அய்யங்கார் ஒருவருக்குச் சொந்தம். அதை இவர் வசமே வைத்துள்ளார். அத்துடன் அதையொட்டியுள்ள புறம்போக்கு நிலங்களையும் ஆக்கிரமித்து வசப்படுத்தியுள்ளார்.

### ஆக்ரமிப்பைத் தடுத்தார்

அதுவும் போதாதென்று மீதமுள்ள புறம்போக்கு நிலங்களையும் வளைத்துக் கொள்ள பெருமாள் முயற்சிப்பதையறிந்த தோழர் வெங்கடாசலம், தலையிட்டுத் தடுத்து—மாஜி இராணுவத்தினருக்கும், அங்குள்ள நிலமற்ற அரிசனங்கள், கோனார்கள், செட்டியார்கள், உடையார்கள், கள்ளர்கள் போன்ற ஏழைக்குடியானவர்களுக்கும் சொந்தமாக்க நடவடிக்கை எடுத்தார். சுமார் 300 ஏக்கர் வரை இவ்வாறு எடுத்து, பட்டா வாங்கிக் கொடுத்திருக்கிறார் அதில் வீடுகளும், வயல்களும் போட்டிருக்கிறார்கள்.

ரயிலிலிருந்து இராயமுண்டான்பட்டி செல்லுகிறவர்கள் 2 கிலோ மீட்டர் சென்றால், வலப்புறமாக மாஜி இராணுவத்தினர் வீடுபோட்டு வசிப்பதைக் காணமுடியும்.

### தண்ணீர்த் தகராறு

அந்த நிலங்களை, தான் விஸ்தரித்துக் கொள்ள முடியவில்லையே என்று பெருமாளுக்கு ஆத்திரம்!

அத்துடன் இந்த பெருமாள் வைத்துள்ள நிலங்கள் மூலமாகத்தான் மாஜி பட்டாளத்தாரின் வயல்களுக்கும் இதர ஏழை மக்களின் வயல்களுக்கும் பாசனத்திற்கு தண்ணீர் வரவேண்டும். ஆனால், ஒவ்வொரு வருடமும் அந்தப் பெருமாள் தண்ணீர்விடாமல் தகராறு செய்வதுண்டு.

பாதிக்கப்பட்டவிவசாயிகளிடம் பெருமாள்ரூ. 200, ரூ.300 என்று வாங்கிக்கொண்டு தண்ணீரும் விடுவாராம். இதுவரை இந்தப் பெருமாளுக்கு இது வழக்கமாக இருந்துவருகிறது.

இப்பிரச்னையில் விவசாயிகள் சங்கத் தலைவரான வெங்கடாசலத்துக்கும் மிராசுதாரரான பெருமாளுக்குமிடையே அடிக்கடி தகராறுகள்ஏற்படும். வெங்கடாசலம் பயமறியாதவர். ஏழைகள் பக்கம் உறுதியாக இருப்பவர். ''இவருக்கு ஏன் பணம் கொடுக்க வேண்டும்? தண்ணீர் பாய்ச்சுங்கள்!'' என்று விவசாயிகளிடம் சொல்லுவார். அப்படிச் செய்ததும் உண்டு. இதனால் பெருமாளுடைய வருமானத்துக்கு பாதிப்பு ஏற்பட்டது. இது ஒரு தகராறு.

### தேர்தல் தகராறு

அடுத்து, தேர்தல் தகராறும் உண்டு. 1965-ல் தோழர் என். வெங்கடாசலம் கடலூர் சிறையில் பாதுகாப்புக் கைதியாக அடைக்கப்பட்டிருந்தார். அப்போது பஞ்சாயத்து தேர்தல் வந்தது சிறைக்குள்ளிருந்தே போட்டியிட்டார். தலைவர் தேர்தலில் வெங்கடாசலத்தை எதிர்த்து, இதே பெருமாள் ஒரு செட்டியாரை நிறுத்தி வைத்து தீவிரமாக வேலை செய்தார். வெங்கடாசலத்துக்கு ஓட்டளிக்கக்கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி ஆதரவாளர்களான பஞ்சாயத்து உறுப்பினர்களை பெருமாள் கடத்திக்கொண்டுபோய் விட்டார்.

ஆனால் தேர்தல்நாளன்று அவர்கள் வந்து வாக்களிக்கும்போது வெங்கடாசலத்துக்கே வாக்களித்து விட்டார்கள். வெங்கடாசலம் வெற்றி பெற்றார்.

இதன் தொடர்பாக, பெருமாளுக்கும் வெங்கடாசலத்தின் குடும்பத்தினருக்கும் இடையே அடிதடி நடந்து வழக்குகளும் நடந்தன. பிறகு 1966—ஜூலையில் வெங்கடாசலம் விடுதலையானார்.

பிறகு, 1970-ல் பஞ்சாயத்துத் தேர்தல் வந்தது. வாக்காளர்களே நேரடியாகத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை அமுலுக்கு வந்தது. தலைவர் தேர்தலுக்கு தோழர் வெங்கடாசலம் போட்டியிட்டார். அவரை எதிர்த்து மிராசுதார் பெருமாளே நேரடியாகப் போட்டியிட்டார். வாக்காளர்களின் மனஓட்டத்தைப்புரிந்து கொண்ட பெருமாள், தான் வெற்றி பெற முடியாது என்பதையறிந்து, அடியாட்களை ஏவி, கலகத்துக்குத் திட்டமிட்டார், என்றாலும் வெங்கடாசலமே வெற்றி பெற்றார். தான் ஒரு பெரிய பணக்காரனாக இருந்தும், ஒரு சாதாரண ஆளிடம், பள்ளுப்பறைகளுடனும் கூலிக்காரன்களுடனும் சுற்றிக்கொண்டு திரிகின்ற ஒரு ஆளிடம் தோற்றுப் போவதா? என்ற ஆத்திரமும், பகைமையும் பெருமாளுக்கு வளர்ந்து வந்தது.

### ஏற்கனவே வெட்ட வந்தார்

1970-ல் பெருமாள் தோற்ற பிறகு, 1971-ல் இதேமாதிரி தோழர் வெங்கடாசலம் ரயிலைவிட்டு இறங்கி, இராயமுண்டான் பட்டிக்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது அவருடன் பஞ்சாயத்து உதவித் தலைவர் குழந்தைவேலுவும், கூட்டுறவு சங்கத் தலைவரும் இதே நேரத்தில் சென்று கொண்டிருந்தனர். மூவரும் சென்று கொண்டிருக்கும்போது, இதே பெருமாளும் சிலரும் ஓடிவந்து வெங்கடாசலத்தைத் தாக்க பாய்ந்தோடி வந்தனர். பெருமாளே அரிவாளைத் தூக்கிக் கொண்டு வெங்கடாசலத்தை வெட்ட ஓடோடி வந்தார். வெங்கடாசலம் தப்பிவிட்டார்.

அதற்குப் பிறகு போலீஸ் விசாரணை செய்து, தஞ்சாவூர் டி. எஸ். பி.யே, இந்த பெருமாளிடம், ''இதுபோன்ற சம்பவங்களில் இனி ஈடுபடுவதில்லை'' என்று முச்சலிக்கை எழுதி வாங்கியுள்ளார்.

1. புறம்போக்கு நிலத்தை வளைத்து தனது நிலத்துடன் விஸ்தரிக்க முடியாது போயிற்றே......

2. பஞ்சாயத்துத் தலைவராக ஆகிவிட்டால் நிலத்தை விஸ்தரிக்கலாம், தலைவர் தேர்தலிலு ஜெயிக்க முடியாது போயிற்றே.........என்ற ஆத்திரம் பெருமாளுக்கு எப்பொழுதும் பொங்கிக் கொண்டிருந்தது.

### இதர மிராசுகளுக்கும் ஆத்திரம்

அரிசன விவசாயத்தொழிலாளர்களின் கூலி உயர்வுப் போராட்டங்கள் தஞ்சைத் தாலுகா முழுவதும் வெடித்த

---

## துப்பு நாய் மோப்பம்

தோழர் வெங்கடாசலம் கொலை சம்பந்தமாக நடவடிக்கை எடுக்க, துப்பறியும் அதிகாரிகள் 1—10—77 பகல் 10 மணிக்கு இராயமுண்டான்பட்டிக்கு வந்தார்கள். அவர்கள் காவல் துறையைச் சேர்ந்த ஒரு மோப்ப நாயையும் கொண்டு வந்தனர்.

வெங்கடாசலத்தின் வேட்டி, சட்டைகளை எடுத்து, நாயின் மூக்கின் முன்னால் மோப்பம் கொடுத்தார்கள். பிறகு நாயை அவிழ்த்து விட்டார்கள். ஊரில் எத்தனையோ வீடுகள் இருந்தும் நாய் அங்கு செல்லவில்லை. பஸ்மெயின் ரோட்டைப் பிடிக்கக் கூடிய 3 மைல் ரோடு இருந்தும், அந்தப் பாதையிலும் செல்லவில்லை. நேரே சோளகம்பட்டி ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லும் மண்பாதை நெடுக ஓடிற்று. ஒரு மைலுக்கு மேலாக ரோட்டிலே சென்றபிறகு—இடப்புறமாக, அறுவடை முடிந்து வெட்ட வெளியாகக் கிடக்கும், பெருமாள் என்பவரின் வயல்களுக்குள்ளே இறங்கி—வரப்புகளைத் தாண்டி—பெருமாளின் ஓய்வு விடுதியான ஓட்டடுக்கு வீட்டுக்குச் சென்று அதைச் சுற்றிவந்தது.

அந்த வீட்டின் முன் ஒரு பந்தல் போடப்பட்டிருக்கிறது. அதில் கட்டில், நாற்காலி, பெஞ்சுகள் போடப் பட்டிருந்தன. அந்த வீட்டைச்சுற்றி வந்த நாய், பந்தலில் போடப்பட்டிருந்த பெஞ்சியில்போய் படுத்துக் கொண்டது.

இவ்வாறு, அங்கு 10 நிமிடம் தங்கிவிட்டு—சோளகம்பட்டி ரயில்வே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டு வந்தது. ரோட்டில் சாராயம் விற்கப்படுகின்ற புளிய மரத்தின் அருகில் வந்து கால்மணி நேரம் படுத்துக் கொண்டது.

போலீஸ் அதிகாரிகள் மீண்டும் வெங்கடாசலத்தின் சட்டை வேட்டிகளை நாய்க்கு மோப்பம் கொடுத்தனர். மோப்பம் பெற்றவுடனே, நாய் நேரே பெருமாள் வீட்டுக்கே மீண்டும் புறப்பட்டுப்போய், அதே பந்தலியே போய் படுத்துக் கொண்டது. அப்படி அரைமணி நேரம் படுத்திருந்தது. பிறகு அதிகாரிகள் நாயைக் கூட்டிக் கொண்டு போய் விட்டார்கள்.

வெங்கடாசலத்தின் அண்ணன் ராஜகோபால் அவர்களின் மருமகன் சிங்காரவேலுவும் நாயின் பின்னாலேயே தொடர்ந்து சென்று பார்த்ததாக கூறி, மேற்படி தகவல்களை 2—10—77-ல் தீக்கதிர் சிறப்பு நிருபர் ஐ. மாயாண்டி பாரதியிடம் தெரிவித்தார்.

# ...லை செய்யப்பட்டதின் பின்னணி என்ன?

## ...திரட்டி இயக்கம் நடத்தினார் ★ ஊழல்களை அம்பலப்படுத்தினார் ★ ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் ...யையும், விவசாய இயக்கத்தையும் வெகுஜன ஸ்தாபனங்களையும் கட்டுவதில் முன்னணியில் நின்றார்.

எடுத்து, பட்டா வாங்கிக் கொடுத்திருக்கிறார் அதில் வீடுகளும், வயல்களும் போட்டிருக்கிறார்கள்-

ரயிலிலிருந்து இராயமுண்டான்பட்டி செல்லுகிறவர்கள் ½ கிலோ மீட்டர் சென்றால், வலப்புறமாக மாஜி இராணுவத்தினர் வீடுபோட்டு வசிப்பதைக் காணமுடியும்.

### தண்ணீர்த் தகராறு

அந்த நிலங்களை, தான் விஸ்தரித்துக் கொள்ள முடியவில்லையே என்று பெருமாளுக்கு ஆத்திரம்!

அத்துடன் இந்த பெருமாள் வைத்துள்ள நிலங்கள் மூலமாகத்தான் மாஜி பட்டாளத்தாரின் வயல்களுக்கும் இதர ஏழை மக்களின் வயல்களுக்கும் பாசனத்திற்கு தண்ணீர் வரவேண்டும். ஆனால், ஒவ்வொரு வருடமும் அந்தப் பெருமாள் தண்ணீர்விடாமல் தகராறு செய்வதுண்டு.

பாதிக்கப்பட்டவிவசாயிகளிடம் பெருமாள்ரூ. 200, ரூ.300 என்று வாங்கிக்கொண்டு தண்ணீரும் விடுவாராம். இதுவரை இந்தப் பெருமாளுக்கு இது வழக்கமாக இருந்துவருகிறது.

இப்பிரச்னையில் விவசாயிகள் சங்கத் தலைவரான வெங்கடாசலத்துக்கும் மிராசுதாரரான பெருமாளுக்குமிடையே அடிக்கடி தகராறுகள் ஏற்படும். வெங்கடாசலம் பயமறியாதவர். ஏழைகள் பக்கம் உறுதியாக இருப்பவர். "இவருக்கு ஏன் பணம் கொடுக்க வேண்டும்? தண்ணீர் பாய்ச்சுங்கள்!" என்று விவசாயிகளிடம் சொல்லுவார். அப்படிச் செய்ததும் உண்டு. இதனால் பெருமாளுடைய வருமானத்துக்கு பாதிப்பு ஏற்பட்டது. இது ஒரு தகராறு.

### தேர்தல் தகராறு

அடுத்து, தேர்தல் தகராறும் உண்டு. 1965-ல் தோழர் என். வெங்கடாசலம் கடலூர் சிறையில் பாதுகாப்புக் கைதியாக அடைக்கப்பட்டிருந்தார். அப்போது பஞ்சாயத்து தேர்தல் வந்தது சிறைக்குள்ளிருந்தே போட்டியிட்டார். தலைவர் தேர்தலில் வெங்கடாசலத்தை எதிர்த்து, இதே பெருமாள் ஒரு செட்டியாரை நிறுத்தி வைத்து தீவிரமாக வேலை செய்தார். வெங்கடாசலத்துக்கு ஓட்டளிக்கக்கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி ஆதரவாளர்களான பஞ்சாயத்து உறுப்பினர்களை பெருமாள் கடத்திக்கொண்டுபோய் விட்டார்.

ஆனால் தேர்தல்நாளன்று அவர்கள் வந்து வாக்களிக்கும்போது வெங்கடாசலத்துக்கே வாக்களித்து விட்டார்கள். வெங்கடாசலம் வெற்றி பெற்றார்.

இதன் தொடர்பாக, பெருமாளுக்கும் வெங்கடாசலத்தின் குடும்பத்தினருக்கும் இடையே அடிதடி நடந்து வழக்குகளும் நடந்தன. பிறகு 1966— ஜூலையில் வெங்கடாசலம் விடுதலையானார்.

பிறகு, 1970-ல் பஞ்சாயத்துத் தேர்தல் வந்தது. வாக்காளர்களே நேரடியாகத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை அமுலுக்கு வந்தது. தலைவர் தேர்தலுக்கு தோழர் வெங்கடாசலம் போட்டியிட்டார். அவரை எதிர்த்து மிராசுதார் பெருமாளே நேரடியாகப் போட்டியிட்டார். வாக்காளர்களின் மனஓட்டத்தைப்புரிந்து கொண்ட பெருமாள், தான் வெற்றி பெற முடியாது என்பதையறிந்து, அடியாட்களை ஏவி, கலகத்துக்குத் திட்டமிட்டார். என்றாலும் வெங்கடாசலமே வெற்றி பெற்றார். தான் ஒரு பெரிய பணக்காரனாக இருந்தும், ஒரு சாதாரண ஆளிடம், பள்ளுப்பறைகளுடனும் கூலிக்காரன்களுடனும் சுற்றிக்கொண்டு திரிகின்ற ஒரு ஆளிடம் தோற்றுப் போவதா? என்ற ஆத்திரமும், பகைமையும் பெருமாளுக்கு வளர்ந்து வந்தது.

### ஏற்கனவே வெட்ட வந்தார்

1970-ல் பெருமாள் தோற்ற பிறகு, 1971-ல் இதேமாதிரி தோழர் வெங்கடாசலம் ரயிலைவிட்டு இறங்கி, இராயமுண்டான் பட்டிக்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது அவருடன் பஞ்சாயத்து உதவித் தலைவர் குழந்தைவேலுவும், கூட்டுறவு சங்கத் தலைவரும் இதே நேரத்தில் சென்று கொண்டிருந்தனர். மூவரும் சென்று கொண்டிருக்கும்போது, இதே பெருமாளும் சிலரும் ஓடிவந்து வெங்கடாசலத்தைத் தாக்க பாய்ந்தோடி வந்தனர். பெருமாளே அரிவாளைத் தூக்கிக் கொண்டு வெங்கடாசலத்தை வெட்ட ஓடோடி வந்தார். வெங்கடாசலம் தப்பிவிட்டார்.

அதற்குப் பிறகு போலீஸ் விசாரணை செய்து, தஞ்சாவூர் டி. எஸ். பி.யே, இந்த பெருமாளிடம், "இதுபோன்ற சம்பவங்களில் இனி ஈடுபடுவதில்லை" என்று முச்சலிக்கை எழுதி வாங்கியுள்ளார்.

1. புறம்போக்கு நிலத்தை வளைத்து தனது நிலத்துடன் விஸ்தரிக்க முடியாது போயிற்றே......

2. பஞ்சாயத்துத் தலைவராக ஆகிவிட்டால் நிலத்தை விஸ்தரிக்கலாம், தலைவர் தேர்தலிலு ஜெயிக்க முடியாது போயிற்றே.........என்ற ஆத்திரம் பெருமாளுக்கு எப்பொழுதும் பொங்கிக் கொண்டிருந்தது.

### இதரமிராசுகளுக்கும் ஆத்திரம்

அரிசன விவசாயத்தொழிலாளர்களின் கூலி உயர்வுப் போராட்டங்கள் தஞ்சைத் தாலுகா முழுவதும் வெடித்த போது—வெங்கடாசலம் தலைமைதாங்கினார். தாலுகாவிலுள்ள மிராசுதார்கள் ஒரு கோவிலிலே கூட்டம் நடத்தி, வெங்கடாசலத்தை எப்படியாவது தலையிடாதபடி செய்து விடவேண்டும் என்று முடிவெடுத்தனர். அவர்களுக்கு அப்படி ஆத்திரம்!

1975-ல் அல்லூர் என்ற ஊரிலே குத்தகை சாகுபடியாளர்களாக இருந்த அரிசனங்களை, குத்தகைப் பதிவுச் சட்டம் வந்தபோது, குத்தகைதாரர்என்று பதிந்துவிடாமலும் பதிவதற்கு அதிகாரிகள் வந்த போது, அவர்களை ஊருக்குள் வரவிடாமலும் அல்லூர் மிராசுதார்கள் தடுத்துவிட்டார்கள். பிறகு சில ஆண்டுகள் கழித்து, சாகுபடியாளர்களிடம் ரிக்கார்டு ஏதும் இல்லாததால், அவர்களை சாகுபடியாளர்களே அல்ல என்று கூறி, நிலத்தில் இறங்கக்கூடாது என்று மிராசுகள் தடுத்தார்கள்.

அப்போது அந்த அரிசன விவசாயிகள், தஞ்சைமாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவராகியவெங்கடாசலத்திடம்வந்து முறையிட்டார்கள். விவசாய சங்கத்திலும் சேர்ந்து கொடியேற்றினார்கள்.

அதற்குப் பிறகு, வெங்கடாசலம் அந்த விவசாயிகளிடம், "நீங்கள் வயலில் இறங்கி வேலை செய்யுங்கள். தடுத்தால் பார்த்துக்கொள்வோம்" என்று சொல்லியனுப்பியதோடு, தாசில்தாருக்கு கடிதமெழுதி, "மறுபடியும் விசாரணை செய்து அவர்களைக் குத்தகைப் பதிவுச் சட்டப்படி பதிய வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். விசாரணைகளும் நடைபெற்றன.

அப்பொதே அந்த மிராசுதாரர்கள், விவசாயிகளை ஜாதியைச் சொல்லி திட்டினார்கள். உடனே வெங்கடாசலம் முயற்சியின் பேரில், தீண்டாமை ஒழிப்புச் சட்டப்படி அவர்கள் மீது விவசாயிகள் வழக்கு தொடர்ந்தார்கள். இதனால் அந்த மிராசுதார்களுக்கு வெங்கடாசலம் மீது ரொம்ப ஆத்திரம்!

### அரிசனங்களுக்கு சுடுகாட்டுக்காக

திருவையாறுக்கு அருகில் உள்ள காருகுடியில் அரிசனங்களின் பிணங்களை எடுத்துச் செல்ல வேண்டுமானால், மேல் சாதிக்காரர்களின் வயல்களைக் கடந்துதான் செல்லவேண்டும் சாகுபடி காலத்தில் தடுத்து விடுவார்கள். சுடுகாட்டுக்கு வேறு பாதையுமில்லை.

இதனால் அரிசனக் குடியிருப்பிலிருந்து நேரே ஊர்வழியாக காவிரி ஆற்றங்கரைக்குச் செல்லும் ரோடில் சென்று ஆற்றங்கரையில் புதைக்க, அங்கு மயானம் வேண்டும் என்று கோரினார்கள் அரிசனங்கள். காமராசர் காலத்திலிருந்து கருணாநிதி காலம் வரையிலும் கேட்டார்கள். கிடைக்கவில்லை. அதற்குப் பிறகு வெங்கடாசலத்தைக் கூட்டிச் சென்று, செங்கொடி விவசாய சங்கத்தில் சேர்ந்தார்கள். ஆற்றங்கரையில் சுடுகாடு பெற வெங்கடாசலம் அதிகாரிக்கெல்லாம் மனுப்போட்டார். வாக்குறுதிகள்தான் கிடைத்தனவே தவிர, சுடுகாடு கிடைக்கவில்லை.

அதற்குப் பிறகு ஒருநாள் மேல்சாதிக்காரர்களின் பட்டா நிலத்தில் பிணத்தை எடுத்துச் செல்லாமல், நேரே ரோடு வழியாகவே வந்து ஆற்றங்கரையில் வைத்து எரித்து விட்டார்கள். வெங்கடாசலம் ஊட்டிய தைரியத்தின் பேரில் இது நடந்தது.

இதனால் ஆத்திரமுற்ற மிராசுதாரர்கள் ஆட்களைத் திரட்டி அரிசனத் தெருவுக்குள் புகுந்து அடித்து நாசப்படுத்தினார்கள். அரிசனங்களை அரிவாளால் வெட்டினார்கள்; கம்பால் அடித்தார்கள்; வீட்டுக் கூரைகளை பிரித்துப் போட்டார்கள்; பண்டபாத்திரங்களை சூரையாடினார்கள்.

### பி. ஆர். தலையீடு

இதில் மிராசுகளுக்கு எதிராக, அரிசனங்களுக்கு ஆதாவாக வெங்கடாசலம் வழக்கு நடத்தினார். ஆற்றங்கரையில் சுடுகாட்டுக்கு இடம் கிடைக்கும் வரையிலும் தொடர்ந்து கிளர்ச்சி நடந்தது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் பி. இராமமூர்த்தி இதில் தலையிட்டு, கவர்னருக்கும் கவர்னரின் ஆலோசகருக்கும் எழுதினார்.

பிறகு 1976-ல்தான் அரிசனங்களைத் தடுக்க முடியாது என்ற நிலைமை உருவானதின் பேரில், காவேரிக்கரையில் சுடுகாடு ஏற்படுத்திக் கொள்ள அரசினர் அனுமதி வழங்கினர். இதனால் காருகுடி மேல்சாதி மிராசுகளுக்கு வெங்கடாசலத்தின் மீது ஆத்திரம்!

### ஒரத்தூர் அரிசனங்களுக்காக

ஒரத்தூர் நத்தமங்கலத்தில் 114 அரிசன விவசாயிகள் 25 ஏக்கர் அரசு புறம்போக்கு நிலத்தை பலவருடமாகப் பயிரிட்டு ஜீவனம் செய்து வருகிறார்கள். தண்டந்தீர்வையும் கட்டுகிறார்கள். அரிசனங்கள் தங்களுக்கு பட்டா வழங்குமாறு அதிகாரிகளுக்கு மனுப் போட்டும் ஒரு பதிலுமில்லை. அவசரநிலைக் காலத்தில் அந்த நிலங்கள் காங்கிரஸ்காரர்களுக்கு பட்டா போட்டுக் கொடுக்க அதிகாரிகள் முன்வந்தனர். இதை ஆட்சேபித்து தோழர் பி. இராமமூர்த்தி கவர்னரின் ஆலோசகருக்கு எழுதினார். மிசா சட்டத்தின் கீழ் சிறைப்பட்டிருந்த வெங்கடாசலம் விடுதலையாகி வந்ததும் சட்ட விதிகளைக் காட்டியும், அரிசன முன்னேற்றத்தைக்

(12-ம்பக்கம் பார்க்க)

## சாராயம் விற்றவளும் அவளது மகளும்

சோளகம்பட்டி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இராயமுண்டான்பட்டிக்குச் செல்லும் மண்ரோட்டில் சிறிது தூரம் சென்றவுடன், ரோடின் வலப்புறத்தில் ஒரு புளிய மரம் இருக்கிறது. அந்த புளியமரத்தின் அடியில் சுமார் 45 வயதுள்ள ஒரு பொம்பளை மல்லிக்காபி விற்பது வழக்கம். 10 காசு கொடுத்தால் மல்லிக்காப்பி ஒரு கிளாஸ் கிடைக்கும். 2 ரூபாய் கொடுத்தால் ஒரு கிளாஸ் சாராயம் கிடைக்கும்.

அதே ரோட்டில்தான், 21–9—77 இரவு சுமார் 8 மணிக்கு மேல் வெங்கடாசலம் வழி மறிக்கப்பட்டு, கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று பலரும் கருதுகிறார்கள். சாராயம் விற்கும் இந்தப் பெண்ணை விசாரித்தால் ஏதாவது துப்புக் கிடைக்கும் என்று போலீஸார் செப்டம்பர் 24, 25, 30 தேதிகளில் விசாரணை நடத்தினர்.

24-ம் தேதி திருக்காட்டுப்பள்ளி சப்-இன்ஸ்பெக்டர் விசாரித்தபோது, தனக்கு ஒன்றும் தெரியாது என்று அந்தப் பெண் சொல்லி விட்டாள். மறுநாள் 25-ம் தேதி காலையில் மீண்டும் விசாரித்தபோது பஞ்சாயத்து தலைவர் யார் என்றே எனக்கு தெரியாது என்று சொல்லி விட்டாள் மத்தியானம் வரையும் ஒன்றும் தெரியாது என்று சொல்லி வந்தவள் மத்தியானத்துக்குப் பிறகு. "ஆமா ரயிலை விட்டு வெங்கடாசலம் இறங்கியதை ராஜப்பா சொன்னார்; நானும் பார்த்தேன்" என்று சொன்னாள்.

மற்றும், "அன்னிக்கி இராத்திரி 7 மணியிருக்கும். சாராயம் விற்றுக் கொண்டிருந்தேன். ஒருவர் ரூ. 2 கொடுத்து ஒரு கிளாஸ் குடித்தார். இன்னொருத்தர் ரூ 2 கொடுத்து ஒரு கிளாஸ் குடித்தார். இன்னொரு ஆள் ரூ. 3 கொடுத்து ஒன்னரை கிளாஸ் சாராயம் குடித்தார். இன்னொருவர் 2 கிளாஸ் சாராயம் குடித்து 4 ரூபாய் கொடுத்தார். இந்த 4பேரும் தனித் தனியாகக் காசு கொடுத்து சாப்பிட்டனர். இவர்கள் எந்த ஊரு என்று தெரியாது"—என்று ரயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே பிளாட்பாரத்தில் வைத்து விசாரித்தபோது மேற்கண்டவாறு சப்-இன்ஸ்பெக்டரிடம் அவள் கூறினாள்.

27-ம் தேதியன்று சர்க்கிள் இன்ஸ்பெக்டர் விசாரித்த போது, "அன்று (21-ம் தேதி) இராத்திரி 7 மணி சுமாருக்கு ஸ்டேஷனிலிருந்து வயற்காட்டில் இறங்கி ரோட்டுக்கு குறுக்கே 3 பேர் போனதைப் பார்த்தேன். அவர்கள் யார் என்றே தெரியாது. அவர்கள் புது ஆட்கள்" என்றாள்.

சாராயம் விற்பவளின் 10 வயது மகளிடம் 30–9–77 காலை 10 மணியளவில் திருக்காட்டுப்பள்ளி சப்-இன்ஸ்பெக்டர் கிருஷ்ணன் விசாரித்தார். அப்பொழுது மார்க்சிஸ்ட் கட்சித் தோழர் மன்னர் மன்னனும் உடன் இருந்தார்.

அப்போது அந்த சிறுமி, "அன்னிக்கி ராத்திரி, ஐயோ அப்பானு சத்தம் போட்டது தெரியும். நானும் அழுது விட்டேன் தாயார், 'சத்தம் போடாதே' என்று கூட்டிக் கொண்டு வீட்டுக்கு போய்விட்டாள். இது சாராயம் விற்று விட்டு, வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த போது, பாதிவழியில் இந்த சத்தம் கேட்டது என்று கூறிற்றாம்.

இந்தச் சாராயம் விற்கும் பெண், வயற்காட்டு நடுவேயுள்ள பெருமாள் என்பவரின் ஓய்வு விடுதி தோப்பில்—பெருமாளின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் குடியிருக்கிறாளாம்.

# என். வெங்கடாசலம் வாழ்க்கை வரலாறு



தோழர் என். வெங்கடாசலம் அவர்கள் தஞ்சை மாவட்டம் இராயமுண்டான்பட்டியில், 1925- ஆண்டு ஜூலை மாதம் 18-ம் தேதியன்று பிறந்தார். தந்தையின் பெயர் திரு நடராஜ கொடும்புறார்; தாயாரின் பெயர் குஞ்சம்மாள்.

திரு நடராஜ கொடும்புறாருக்கு 4-வது பிள்ளையாகப் பிறந்தார் வெங்கடாசலம். வெங்கடாசலத்துக்கு இரண்டு அண்ணன்களும், ஒரு அக்காளும் உண்டு. இக்குடும்பம் அக்காலத்தில் செழிப்பான நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த குடும்பமாகும். இந்தக் குடும்பத்தில் இவர் கடைசிப்பிள்ளையாதலால், இவரை ஊர்மக்கள் சின்னவர் என்றே மரியாதையாகவும், அன்பாகவும் அழைத்தனர். இவரது அண்ணன் ராஜகோபால்கொடும்புறார் கிராம முன்சீபாக இருந்தார்.

இவரது பாலபருவத்திலேயே தாயார் காலமாகிவிட்டார். இவரது தமக்கையின் கணவரும் காலமாகிவிட்டதால், தமக்கை விதவைக் கோலமானார். இந்த இழப்புகள் அவருக்கு மிக்க சோர்வை உண்டுபண்ணின.

## அவர் கற்ற கல்வி

வெங்கடாசலம் ஆரம்பத்தில் திண்ணைப் பள்ளிக்கூடத்திலும், பிறகு அரசுத் தொடக்கப்பள்ளியிலும் கல்வி பயின்றார். நாளடைவில் குடும்பம் வறுமைப்பட்டு, நிலங்களை விற்க வேண்டியதாயிற்று.

இதனால் வெங்கடாசலம் தொடர்ந்து படிக்க முடியவில்லை. சொந்த முயற்சியில் படிப்பும் பயிற்சியும் அரசியல் இயக்கத்தில் பங்கு கொண்டதால் கிடைத்த அனுபவ ஞானமும்தான் அவருக்குக் கல்வியாக அமைந்தது. கம்யூனிஸ்ட் கட்சியில் 1955 ல் உறுப்பினரானார். கட்சி மாநாடுகள், விவசாயிகள் சங்க மாநாடுகள் ஆகியவற்றுக்கெல்லாம் பிரதிநிதியாகக் கலந்து கொள்ளுவார். தஞ்சையில் நடந்த எஸ். எம். டி. பஸ் போராட்ட மறியலிலும் கலந்து கொண்டார்.

## திருமணமான ஒருவாரத்தில்

1959-ல் நடந்த பஞ்சாயத்து போர்டு தலைவர் தேர்தலில் தோழர் வெங்கடாசலம் போட்டியிட்டார். இவரை எதிர்த்துப்போட்டியிட்ட சொரக்குடிபட்டி பெருமாள் என்ற மிராசுதார் போட்டியிட்டார். இத்தேர்தலில் வெங்கடாசலம் வெற்றி பெறவே, பெருமாள் தனது வெறுப்பைக் காட்டும் முறையில் தனது பஞ்சாயத்துஉறுப்பினர்பதவியைராஜினாமாச் செய்து விட்டார்.

விலைவாசி உயர்வை எதிர்த்தும், நிலச் சீர்திருத்தம் கோரியும் நடைபெற்ற கட்சிப் பிரச்சார பாதயாத்திரைகளிலும், புயல் நிவாரண வேலைகளிலும் தீவிரமாகப் பங்கு கொண்டார்.

1961-ம் ஆண்டில் இவருக்கும் தோழியர் லீலாவதிக்கும் தமிழக விவசாயிகள் சங்கத் தலைவர் மணலி சி. கந்தசாமி தலைமையில் திருமணம் நடைபெற்றது.

திருமணமாகி ஒரு வாரத்துக்குள் விவசாயிகள் போராட்டம் ஆரம்பமாகி விட்டது. நில உச்சவரம்புச் சட்டத்திலுள்ள ஓட்டைகளை அடைத்து, உழுபவர்களுக்கு நிலம் கிடைக்கத்தக்கவகையில் உச்சவரம்புச் சட்டத்தை ஒழுங்காகத் திருத்த வேண்டுமென்று கோரி, தமிழகத் தலைவர்கள் பி. சீனிவாசராவ், மணலி கந்தசாமி தலைமையில் மறியல் போராட்டம் நடத்தி 16,000 பேர் சிறை சென்றபோது, தோழர் வெங்கடாசலமும் சிறையேகினார்.

## ஒன்றரை ஆண்டு சிறைவாசம்

1962-63-ம் ஆண்டில் இந்திய-சீன எல்லைப்போரைத் தொடர்ந்து தலைவர்கள்சிறைப்பிடிக்கப்பட்ட போது, கட்சிப்பணிகளையும் விவசாய சங்க வேலைகளையும் வெங்கடாசலமே பொறுப்பேற்று நடத்தினார்.

1964 டிசம்பரில் கட்சி பிரிந்ததையடுத்து மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்களையெல்லாம் கடலூர் சிறையில் அடைத்தபோது, தோழர் வெங்கடாசலமும் அடைக்கப்பட்டார். ஒன்னரை ஆண்டு சிறைவாசத்துக்குப் பிறகு 1966ஜூலையில் விடுதலை ஆனார்.

1970-ல் நடந்த பஞ்சாயத்து தேர்தலிலும் தோழர் வெங்கடாசலம் வெற்றி பெற்றார். அவரை எதிர்த்து அதேசொரக்குடிபட்டி மிராசுதார்பெருமாளே போட்டியிட்டுத் தோல்வியுற்றார்.

1971 பொதுத்தேர்தலில் திருவையாறு சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்டார். 1973 செப்டம்பரில் விலைவாசிக் குறைப்புக்காக நடந்த தர்ணாவிலும் கலந்து கொண்டு, 19 நாள் சிறைவாசமும் புரிந்தார்.

## நியாயங்களுக்காகப் போராடினார்

1972 முதல் 75 வரை விவசாய தொழிலாளர்களின் போராட்டங்கள் சீறி எழுந்தபோது, 1976 பிப்ரவரியில் இந்திரா அரசு அவசரநிலைபிரகடனம் செய்தது. தலைவர்கள் பலர் சிறைப்பட்டனர். தோழர் வெங்கடாசலம் தலைமறைவாகி இயக்க வேலைகளைத் தொடர்ந்து செய்தார். தலைமறைவாக இருந்தபோது போலீசார் வெங்கடாசலத்தின் குடும்பத்திற்கு இழைத்த கொடுமைகள் ஏராளம். பண்டபாத்திரங்களையும் வீட்டிலிருந்த பலகைகளையும் அவரது போட்டோ படங்களையும் அள்ளிச் சென்றனர். குழந்தைகள் பள்ளிக்குச் செல்லாதபடி மிரட்டப்பட்டனர். மனைவியும் வெளியில் செல்ல முடியாதபடி தொந்திரவு செய்தனர். பிறகு மிசாவில் கைது செய்யப்பட்டார்.

1970 ல் தஞ்சாவூர் கூட்டுறவு மத்திய வங்கியில் ரூ. 2லட்சம் களவாடிய வங்கித் தலைவரை அம்பலப்படுத்தி, அனைத்துக் கட்சிகளையும் சேர்த்து இயக்கம் நடத்தி,, வங்கித் தலைவருக்கு தண்டனை கிடைக்கச் செய்தார்.

அதுபோல, 1970-ல் தஞ்சை காவல் நிலையத்தில் ஜமீலா என்ற முஸ்லீம் பெண்ணை, போலீசார் கற்பழித்து கொன்று விட்டு தற்கொலை என்று போலீசார் அறிவித்த போது, அது ஒரு படுகொலை என்று சர்வகட்சிகளையும் திரட்டி பெருங்கிளர்ச்சி செய்து நிரூபித்தார்.

1975-ல் சோளகம்பட்டி ரயில்வே நிலையத்தில், ஆந்திராவிலிருந்து வந்த ஒரு யாத்திரீகர் கோஷ்டியில் ஒருவரை அரிசி கடத்தினார் என்று போலீசார் அடித்துக் கொன்று விட்டார்கள்.

(2-ம் பக்கம் பார்க்க)

வருமானம்—ஊதியக் கொள்கை பற்றி

# அனைத்துத் தொழிற்சங்க மாநாடு தீர்மானம்

விலைவாசி உயர்வு எதிர்ப்பு, தொழிற்சங்க உரிமைகளுக்காகப் பழி வாங்கப்படுவதற்கு எதிர்ப்பு, மற்றும் பொதுக் கோரிக்கைகள் பற்றிய அகில இந்திய தொழிற்சங்க சிறப்பு மாநாடு கடந்த செப். 18-ல் புதுடெல்லியில் விக்யான் பவனில் நடந்தது. இம்மாநாட்டில் வருமானம் மற்றும் ஊதியக் கொள்கை பற்றி நிறைவேற்றப்பட்ட தீர்மானம் வருமாறு:—

(இம்மாநாட்டின் இறுதியில் வெளியிடப்பட்ட அறிக்கை, பங்கேற்ற சங்கங்கள் பற்றிய முழுவிவரம் கடந்த வார (2—10—7 ) தீக்கதிரில் பிரசுமாகியுள்ளது. )

நம் நாட்டில் நிலவும் அளவற்ற வருமான ஏற்றத் தாழ்வுகளை நோக்கும் போது, ஏழ்மையை ஒழிக்க, வருமான-ஊதியக் கொள்கை அவசியமானது என்று தொழிற்சங்கங்களின் இம் மாநாடு கோருகிறது.

வளர்ச்சியடைந்த நாடுகளில் வருமான — ஊதியக் கொள்கை என்பது பொதுவாக பண வீக்கத்தை கட்டுப்படுத்தும் ஒரு வழியாகக் கையாளப்படுகிறது; ஆனால் உழைக்கும் வர்க்கத்தினரின் ஊதிய உயர்வுக்கு எதிராகத்தான் பயன்படுத்தப்படுகிறது.

## காங்கிரஸ் ஆட்சியின் நடவடிக்கை லட்சணம்

காங்கிரஸ் அரசும் ''வருமான ஊதியக் கொள்கை'' பற்றி பேசியது; ஆனால் நடைமுறையில் காங்கிரஸ் அரசும் அவர்களின் ஆலோசகர்களும் தொழிலாளர்களில் ஒரு பகுதியினருக்கும் இன்னொரு பகுதியினருக்கும் இடையே ஊதியங்களில் நிலவும் ஏற்றத் தாழ்வுகள் மீதே மிகவும் ஆர்வம் காட்டினார்கள். ஒரு தொழிலாளிக்கு எதிராக இன்னொரு தொழிலாளியை நிறுத்தி, முதலாளி வர்க்கத்தினரின்- அரசாங்கத்தின் மொத்த ஊதியக் தொகையை குறைப்பதற்கு முயற்சித்தனர். இம்முயற்சியில், நிலப்பிரபுக்கள், ஏகபோகங்கள், பணக்காரர்கள் இவர்களின் வருமானத்தை குறைப்பதற்குக் கடுகளவும் தொடாமல் விட்டுவிட்டு, தொழிலாளிகளில் ''சராசரி'' க்குக் கொஞ்சம் மேலாக ஊதியம் பெறும் தொழிலாளர்களின் ஊதியத்தை குறைக்க முயற்சிக்கப்பட்டது. கிராமப்புற விவசாயத் தொழிலாளர்களின் ஏழ்மைஊதியத்தோடுஉழைக்கும் வர்க்கத்தினரின் ஊதிய விகிதங்களை ஒப்பிட்டு விவசாயத் தொழிலாளரை விட அதிக ஊதியம் வாங்குவதாக தொழிலாளர் வர்க்கம் ஒரு விசேஷ சலுகை படைத்த பகுதி எனத் தவறாகக் கூறப்பட்டது.

வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகளை குறைத்தல் என்ற பேரில் மேற்கூறிய போலியான வருமான—ஊதியக் கொள்கை பற்றி இம்மாநாடு தொழிலாளரை எச்சரிக்கிறது.

## ஜனதா கட்சி கூறியதென்ன?

இதற்கு நேர்மாறாக ஜனதா கட்சி தனது தேர்தல்அறிக்கையில் கீழ்வருமாறு கூறியுள்ளது:

''பொருளாதாரக் கொள்கைகள் விவசாயத்துறையிலும் தொழிற்துறையிலும் உள்ள தொழிலாளர் நலன்களைப்பாதுகாக்க வேண்டுமென ஜனதா கட்சி நம்புகிறது. சகல பிரிவு தொழிலாளர்களுக்கும் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயம் செய்ய மசோதாக்களை இந்தக்கட்சி கொண்டு வரும். ஒரு தொழிலாளி தன்னையும் தன் குடும்பத்தையும் பராமரிக்கப் போதுமானதாகவும் அந்த குறைந்தபட்ச ஊதியம்இருக்க வேண்டும்.

விலையேற்றத்தால் இழக்கப்படும் வாங்கும் சக்தியை பஞ்சப்படியை அதிகரிப்பதன் மூலமாக ஈடு செய்ய வேண்டுமென்று நம்புகிறது. அதே வேளையில் ஒரு சீரான தேசிய ஊதிய—விலைவாசிக் கொள்கை வரையறுக்கப்படாமலும் அதனை அமுல் நடத்தாமலும் ஆளுங்கட்சி (காங்கிரஸ்) முற்றாகத் தவறியதுதான் பிரச்னையில் காணப்படும் இடர்பாடுகளுக்கு காரணம் என ஜனதா கட்சி உணர்கிறது.

கீழே காணப்படும் விதிகளை அடிப்படையாகக்கொண்டு ஒருதேசிய ஊதிய—விலைவாசிக் கொள்கையை வரையறுத்து செயல்படுவதில் கொஞ்சமும் காலம் தாழ்த்தாது.

1. நியாயமான ஊதியம் என்பது குறைந்தபட்ச ஊதியமாகும்.

2. உற்பத்தித்திறன் உயர்வினால் வரும் பலன்களில் ஒரு விகிதாச்சாரத்தை தொழிலாளர்கள் பெறவேண்டும்.

3. ஊதிய — விலைவாசிக் கொள்கையானது வருமானத்தில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க உறுதி தர வேண்டும். குறைந்தபட்ச வருமானம் உயர்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இதன்மூலம் குறைந்தபட்ச — அதிகபட்ச வருமானங்களின் (வரி செலுத்தப்பட்டபின்) வேற்றுமை 1: 20 என்ற விகிதாச்சாரத்திற்கு கொண்டு வரப்படும். 10 ஆண்டு காலத்திற்குள் இவ்விகிதம் 1:10 என்று குறைவதற்கு தொடர்ந்து ஜனதாக் கட்சி பாடுபடும். இதற்காக வருமானம் உப்புவதை தவிர்க்கும்; அடிமட்டத்தை உயரச் செய்யும் வருமான மறுவிநியோகக் கொள்கையை அனுஷ்டிக்கும்.

## செய்யவேண்டியதென்ன ?

இந்த உறுதிமொழி சரியான வழி முறையில் உள்ளதென இம்மாநாடு கருதுகிறது,

இந்த உறுதிமொழியை

(11-ம் பக்கம் பார்க்க)

# நெருப்போடு விளையாடாதீர்கள்

பிரதமர் மொரார்ஜி தேசாய் அவர்கள் சமீபத்தில் மொழிப்பிரச்சனையைப் பற்றிப் பேசி யிருக்கிருர். அவர் கூறுகிருர்.

''இந்தி இறுதியாக ஒரு நாள் இந்த நாட்டின் பொது மொழியாக மாறும் என நம்புகிறேன். இந்தியைத் தவிர வேறு எந்த மொழியும் இந்த நாட்டின் பொது மொழியாக ஆக முடியாது. காரணம் இந்தி மொழி ஒன்றுதான் இந்த நாட்டிலுள்ள கிட்டத்தட்ட 60 சத விகித மக்களால் பேசவும், புரிந்துகொள்ளப்படவும் செய்கிறது.''

(இந்தியன் எக்ஸ்பிரஸ் 19-9-77)

மேலும், நண்பர் அகிலன் அவர்களுக்கு பாரதீய ஞான பீடப் பரிசு வழங்கிப் பேசுகையிலும்,

''இந்த நாட்டில் முழு ஒற்றுமையை உருவாக்குவதற்கு அனைத்து மக்களுக்கும் ஒரு இந்திய மொழி தேவை'' என்றும் பேசியிருக்கிருர்.

அந்த ஒரு மொழி எதுவாக இருக்க வேண்டும்? பிரதமர் கூறுகிருர்:

''வேறு எந்த ஒரு மொழியும் 10 சதவிகித மக்களுக்கு மேல் புரிந்துகொள்ளப்படுவதில்லை. எனவே 10 சதவிகித மக்கள் அறிந்துள்ள ஒரு மொழியை 100 சதவிகித மக்கள் தெரிந்து கொள்வதைவிட இந்தி மொழியை 100 சதவிகித மக்கள் புரிந்து கொள்வது எளிது, அதுவே நடைமுறைக்கு உகந்தது.''

(இந்தியன் எக்ஸ்பிரஸ் 19-9-77)

என்ன சொல்கிருர் பிரதமர்? ஹிந்தி ஒரு நாள் இந்த நாட்டின் பொது மொழி ஆகும் என்கிருர்.

பொது மொழி என்பதற்கு அவர் கொள்ளும் பொருள் என்ன? இந்த நாட்டின் 100 சத விகித மக்களும் தெரிந்து கொள்ளும் வாய்ப்புள்ள ஒரு மொழி என்கிருர்.

இதுவரை—ஹிந்தி மொழியை தேசீய மொழி என்ருர்கள். பின் அந்த வார்த்தைக்கு எதிர்ப்பு வந்ததால் 'இணைப்பு மொழி'' என்ருர்கள். ஆனல் இன்றைய பிரதமரோ இந்திக்கு பொது மொழி என்று ஒரு புது அந்தஸ்து வழங்கியிருக்கிருர்.

மொழிப் பிரச்னை குறித்துப் பிரதமர் கூறியுள்ள கருத்துக்களை விமர்சிக்கும் முன் அவர் தனது உரையில் குறிப்பிட்டுள்ள ஒரு புள்ளி விவரத்தைப் பற்றி நமது கருத்தைக் கூற விரும்புகிருேம்.

அதாவது இந்த நாட்டிலுள்ள 60 சதவிகித மக்களுக்கு இந்தி மொழி தெரியும் என்று கூறுகிருரே அதைத்தான் குறிப்பிடுகிருேம்,

## இந்தி மொழி தெரிந்தோர் 60 சதவீதமா?

இந்த புள்ளிவிவரத்தை பிரதமர் அவர்கள், மொழிப் பிரச்சனையைப் பற்றிப் பேசும் போதெல்லாம் கையாண்டு கொண்டே வருகிருர். ஆனல், இதனை எங்கேயிருந்து எடுத்துள்ளார் என்பதை மட்டும் குறிப்பிடுவதில்லை.

எனவே, நாம் 1971 ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பினைச் சிறிது புரட்டிப் பார்ப்போம். அதில் இந்தி மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களின் எண்ணிக்கை 15, 37, 29, 062 என கொடுக்கப்பட்டுள்ளது. இந்தஎண்ணிக்கையில் ஹிந்தி மொழியோடு தொடர்பு கொண்ட இதர பேச்சு வழக்கிலுள்ள மொழிகளைப் பேசுவோரும் சேர்க்கப்பட்டுள்ளனர் எனக் கூறப்பட்டுள்ளது.

1971 ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி இந்திய நாட்டின் மொத்த மக்கள் தொகை கிட்டத்தட்ட 55 கோடியாகும். அதாவது இந்தியை தாய் மொழியாகக் கொண்டவர்களின் எண்ணிக்கை மொத்த மக்கள் தொகையில் 27 சத விகிதம் தான்.

இந்தி பேசும் மக்கள் தொகையினைக் கணக்கிடும் பொழுது உருது, ராஜஸ்தானி, பீகாரி, பகாரி போன்ற மொழிகளைப் பேசுவோர்களையும் சேர்த்துக் கொள்ளலாம் என்று மனோரமா—ஆண்டுப் புத்தகம் குறிப்பிடுகிறது.

உருது என்பது ஒரு தனி மொழி. அது பேசும் மக்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட 2 கோடியே 86 லட்சமாக உள்ளது. இதை எப்படி இந்தி பேசும் மக்கள் தொகையுடன் சேர்த்துக்கொள்வது?

சரி! உருதுவையும், ராஜஸ்தானியையும், பீகாரியையும் பகாரியையும் பேசுவோரையும் சேர்த்தே கணக்கிடுவோம். ஆனல் அப்படி கணக்கிட்டால் கூட இந்தி பேசும் மக்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட 19 கோடியாகத்தான் உள்ளது. இது மொத்த மக்கட் தொகையில் 35 சதவிகிதம் தான்.

ஆனல், பிரதமரோ இந்தியைப் பேசக் கூடியவர்கள், அதனைப் புரிந்து கொள்ளக் கூடியவர்களின் எண்ணிக்கை 60 சத விகிதம் என்று திரும்பத் திரும்பக் கூறுகிருர். அதாவது, இதர மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டுள்ளவர்களில் 25 சத விகிதத்தினருக்கு இந்தி மொழியும் தெரியும் என்கிருர்.

இந்த நாட்டில் எழுத்தறிவு பெற்றுள்ளவர்களின் எண்ணிக்கையே மொத்த ஜனத் தொகையில் 29 சதவிகிதம்தான்.

இந்த நிலையில் இந்தி மொழியைத்தவிர இதர மொழிகளைத் தாய் மொழிகளாகக் கொண்டுள்ளவர்களில் தங்கள் தாய் மொழிகளோடு இந்தி மொழியையும் அறிந்து கொண்டுள்ளவர்களின் எண்ணிக்கை 25 சதவிகிதம் என்ருர். அது ஒப்புக் கொள்ளக் கூடிய விஷயமா?

வட இந்தியாவில் பெரிய நகரங்களில் உள்ள சில படிப்பாளிகள் தங்களது தாய்மொழிகளோடு ஹிந்தி மொழியையும் பேசுவது கண்டு கிராமப் புறத்திலுள்ள இதர மொழிகளைத் தாய் மொழிகளாகக் கொண்டுள்ள பாமர மக்கள் இந்தியைப் பேசுகிருர்கள் என்ற தவருன முடிவுக்கு வந்திருக்கிருர் பிரதமர்.

இப்படி உண்மைக்குப் புறம்பான ஒரு புள்ளி விவரத்தை அடிப்படையாக கொண்டு தான் இந்த நாட்டின் 100 சத விகித மக்களும் இந்தியை கற்றுக்கொள்ளலாம் என்ற தனது கனவு மாளிகையை எழுப்பியுள்ளார் பிரதமர்.

**அருணன்**

சரி! அப்படியே 60 சத விகிதமக்களால் இந்தியோ அல்லது வேறு ஒரு மொழியோ பேசப்படுகின்ற ஒரு நாள் வந்தாலும், அதற்காக இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனும் நிர்ப்பந்தமாக அந்த மொழியைக் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் எங்கே வருகிறது பிரதமருக்கு?

## முழு ஒற்றுமையை உருவாக்குவது எப்படி?

பிரதமர் கூறுகிருர் ''இந்த நாட்டில் முழு ஒற்றுமையை'' உருவாக்க அனைத்து மக்களுக்கும் ஒரு பொது மொழிதேவை!

மக்கள் அனைவரும் ஒரே மொழியைப் பேசினல் தான் இந்த நாட்டில் முழு ஒற்றுமையை உருவாக்க முடியுமா? வேற்றுமையிலே ஒற்றுமையைக் கண்டு இந்த நாட்டு மக்கள் இன்றுவரை ஒற்றுமையுடன் வாழ்ந்துகொண்டிருக்கிருர்களே, இது எப்படி சாத்தியமாயிற்று? அவர்கள் அனைவரும் ஒரே மொழியைப் பேசுவதாலா? இல்லையே.

பாரதி பாடினன்:

''முப்பது கோடி முகமுடை யாள் உயிர்
மொய்ம்புற வொன்றுடை யாள்—இவள்
செப்பு மொழிபதி னெட்டுடை யாள், எனிற்
சிந்தனை ஒன்றுடை யாள்''

அன்று முப்பது கோடி மக்கள் இருந்த போதும் இந்த நாட்டில் ஒற்றுமை இருக்கத்தான் செய்தது. ஆகவே இன்று அறுபது கோடியாக மாறியுள்ள போதும் அந்த ஒற்றுமை பலவீனப்பட்டுவிடவில்லை.

''செப்புமொழி பதினெட்டுடையாளாக'' இருந்த போதும் ''சிந்தனை ஒன்றுடையாளாக'' இருந்தாள் நம் பாரதத் தாய். இன்று இந்தியாவில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட மொழிகள் பேசப்படுவதாக 1961ஆம் ஆண்டு கணக்கெடுப்பில் தெரிய வந்துள்ளது. ஆயினும் அதனல் இந்த நாட்டு ஒற்றுமைக்கு கேடு வந்ததாகத் தெரியவில்லையே.

இந்த நாட்டு மக்களின் ஒற்றுமைக்கு ஏதேனும் பங்கம் ஏற்பட்டிருந்தால் அதற்குக் காரணம் இதுவரை ஆட்சி புரிந்த காங்கிரஸ் ஆட்சியாளர்களின் கொள்கையும், போக்குமே. இரண்டு மாநிலத்திலுள்ள சில சுயநலமிகளைத் தூண்டி விட்டு மாநிலங்களுக்கிடையில் தகராறுகளை கிளப்பி அதிலே தங்களது குற்றங்களை மறைத்து குளிர் காய்ந்து கொண்டிருந்தனர் காங்கிரஸ் ஆட்சியாளர்கள்.

எனவே, இந்த நாட்டில் முழு ஒற்றுமையைக் கண்டிட காங்கிரஸ் ஆட்சியாளர்களின் இந்த தவருன கொள்கைகளை மாற்ற வேண்டுமே தவிர, அதை விடுத்து இப்படி ''ஒரே மொழி'' இருந்தால்தான் முழு ஒற்றுமையைக்காண முடியும் என்று பேசுவது உள்ள ஒற்றுமையையும் உருக்குலைக்கவே செய்யும்; முழு ஒற்றுமையை உருவாக்கிடாது என்பதனைப் பிரதமர் உணர வேண்டும்.

## தேச பக்திக்கு எது அளவுகோல்?

அடுத்து பிரதமர் கூறுகிருர்:

''இந்த நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் இந்தியைப் புரிந்து கொள்ளும் நாள் வரத்தான் போகிறது என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இதனைக் கட்டாயத்தின் பேரில் செய்திட முடியாது. ஆனல் தேசபக்தி உருவாக்குர் கட்டாயம் இதனை சுமுகமான முறையில் சாதித்து விடும்''

(இந்தியன் எக்ஸ்பிரஸ்-19-9-77)

அதாவது ஒருவனுக்கு தேசபக்தி உள்ளதா இல்லையா என்பதை அவன் இந்தியை அறிந்துள்ளான இல்லையா என்பதைக்கொண்டு தான் பிரதமர் அவர்கள் தீர்மானிக்கப் போகிருர்கள்.

ஒருவனுக்கு நன்ருகப் பாடத் தெரியுமா தெரியாதா என்பதைக் கொண்டு அவன் ஒரு சிறந்த மருத்துவன இல்லையா என்று தீர்மானித்தால்,

ஒருவனுக்கு நன்ருக சமைக்கத் தெரியுமா தெரியாதா என்பதைக் கொண்டு அவன் ஒரு சிறந்த வழக்கறிஞரா இல்லையா என்று தீர்மானித்தால்,

அது எவ்வளவு விசித்திரமாக இருக்குமோ அதை விட வேடிக்கையாக இருக்கிறது பிரதமர் அவர்கள் இந்தியைக் கொண்டு இந்த நாட்டு மக்களின் தேசபக்தியை அளவிட முன் வந்திருப்பது.

ஒரு புறம் இந்தியைத் திணிக்க மாட்டோம் என்று பேச்சு; மறுபுறம் தேச பக்தி அதனை திணித்துவிடும் என்று முழக்கம்.

இந்தியை திணிக்கக் கூடிய பக்தி தேசபக்தியாக இருக்காது அது இந்தி பக்தியாகத்தான் இருக்கும்.

ஏற்கனவே காங்கிரஸ் ஆட்சியாளர்கள் இந்தித் திணிப்பு எனும் பயத்தை மக்கள் மனதில் விதைத்துப்போயிருக்கிருர்கள். அந்த பயத்தைப் போக்கும் விதத்தில் இல்லை பிரதமரின் இந்தப் பேச்சுக்கள்.

பிரதமரின் இந்தப் பேச்சுக்களை வெறும் வெற்றுரைகள் என்று நாம் புறக்கணித்து விடமுடியாது.

நடை முறையிலும் கூட இன்றைய ஆட்சியாளர்களும் மொழிப்பிரச்சனையில் தவருன கண்ணேட்டத்துடனேயே செயல்படுகிருர்கள்.

## இன்னும் அமுலில் உள்ள அவசரநிலைக்கால உத்திரவு

உதாரணமாக, திருவனந்தபுரத்தைச் சார்ந்த அக்கவுண்டண்ட் ஜெனரல் அலுவலகப் பணியாளர்கள் சங்க பொதுச் செயலாளர், தோழர். இ.எம்.எஸ்.சிற்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் இப்படி குறிப்பிட்டுள்ளார்:

''அவசர கால நிலையின் போது இந்தியை திணிப்பிற்காக பல கட்டளைகளைப் பிறப்பித்தது அன்றைய மத்திய அரசு. உதாரணமாக இந்திய தணிக்கை மற்றும் கணக்கு அலுவலகத்தில் பணி புரியும் எழுத்தர்களும், தட்டெழுத்துப் பொறியாளர்களும் பதவி உயர்வு பெற வேண்டுமென்ருல் அவர்கள் இந்தி தட்டெழுத்தில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டுமென்று ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஒரு மத்திய ஸ்தாபனமாகிய இந்த அலுவலகத்தில் இந்திபேசாத பகுதியைச் சார்ந்த பலரும் பணிபுரிந்து வந்தனர். இந்த ஆணையினுல் அவர்கள் பதவி உயர்வு பாதிக்கப்பட்டது. இந்த நிலை அவசர நிலை முடிந்த பிறகும் தொடர்ந்து நீடிக்கிறது; இதனல் இந்தி பேசாத பகுதியைச் சார்ந்தவர்களும் இந்தி பேசும் பகுதியைச் சார்ந்தவர்களும் ஒருவருக்கொருவர் எதிரிகளாக ஆக்கப்பட்டுள்ளனர்.''

''அவசர நிலையின்போது

(10-ம் பக்கம் பார்க்க)

# நிர்ப்பந்தத்தால் இணைப்பு மொழி வளருமா?

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்தியைத்திணிப்பதற்காக1976 ஆம் ஆண்டு தேசீய மொழிச் சட்டம் என ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இந்தச் சட்டத்திலுள்ள 8 (1)ஆம் விதி மத்திய அரசு அலுவலகங்களிலிருந்து இந்தி பேசும் மாநிலங்களுக்கு (பீஹார் ஹரியானு, இமாசல்பிரதேஷ், ம.பி.உத்தர பிரதேஷ், புது டெல்லி) அனுப்பப்படும் கடிதங்கள் இந்தியில்தான் இருக்க வேண்டும் என்று கூறுகிறது. இந்த விதியின் அடிப்படையில் மத்திய பிரதேசத்திலுள்ள அக்கவுண்டண்ட் ஜெனரல், தனது அலுவலகத்திலிருந்து எழுதப்படுகின்ற எந்த வொரு கடிதமும் ஆங்கிலத்தில் எழுதப்படக் கூடாது. அப்படி எழுதினுல் அதற்கான காரணத்தை குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும் என்று ஓர் ஆணை பிறப்பித்திருக்கிருர். இந்த கட்டளையை விடாப்பிடியாகக் கடைப்பிடிக்கும்படி இதர அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டுள்ளார்.''

''மேலே குறிப்பிட்டுள்ள இந்தி பேசும் மாநிலங்களிலுள்ள அக்கவுண்டெண்ட் ஜெனரல் அலுவலகத்தில் பணிபுரிவோரில் பலர் கேரளா, தமிழ்நாடு, கர்னுடகா, ஆந்திர பிரதேஷ், மேற்கு வங்கம் போன்ற மாநிலங்களிலிருந்து வந்தவர்கள். இந்த ஆணையைப் பின்பற்றுவது அவர்களுக்கு பெரும் சிரமமாக இருக்கும்.''

## பிரதமருக்கு இ. எம். எஸ். கடிதம்

ஆக, 'மொழிப் பிரச்னையில் இன்றைய ஆட்சியாளர்களும் அன்றைய காங்கிரஸ் ஆட்சியாளர்கள் நடந்து சென்ற பாதையில்தான் தொடர்ந்து சென்று கொண்டிருக்கிருர்கள்.

இந்தப் போக்கினைச் சுட்டிக் காட்டுவதற்காக, தோழர் இ.எம்.எஸ். இந்த கடிதத்தினை பிரதமர் அவர்களுக்கு அனுப்பி வைத்து அத்தோடு தானும் ஒரு கடிதத்தை ஆகஸ்ட் 8ம் தேதியன்று அவருக்கு எழுதினுர். அதில்,

'' அக்கவுண்டெண்ட் ஜெனரல் அலுவலகம் ஒரு மத்திய அமைப்பு. பல்வேறு மொழி, கலச்சாரத்தைச் சார்ந்த அனைத்துப்பகுதி மக்களுக்கும் அங்கு வேலை பெற உரிமை உண்டு. எனவே, அனைவரும் இந்தியில்தான் எழுத வேண்டும் என்று ஆணையிடுவது இவர்களில் பலருக்கு பெரும் சிரமமாயிருக்கும். இது இந்தி பேசாத மக்கள் மீது இந்தியைத் திணிக்கும் ஒரு முயற்சி'' என்று குறிப்பிட்டு விட்டு,

''இது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியல்ல. உங்கள் அமைச்சரவையிலும் இந்தி பேசும் மாநில அரசுகளிலும் உள்ள உங்களின் நண்பர்கள் சிலர், இந்தப் பிரச்சனையில் கைக்கொள்ளும் அடாவடித் தனமான போக்கு மக்கள் மத்தியில் கோபத்தையும் கொந்தளிப்பையும் உருவாக்கியுள்ளது. நிலமை கை நழுவிப் போகாதபடி பார்த்துக் கொள்ள உங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தும்படி கேட்டுக்கொள்கிறேன்.'' என்று எழுதினுர்.

இந்தக் கடிதத்திற்கு, மாநில அரசின் உத்திரவின்படி இது நடந்திருக்கும் என்றும் இதில் தான் தலையிட இயலாது என்றும் ஆயினும் இதனை மத்திய நிதி அமைச்சகத்தின் பரிசீலனைக்கு அனுப்புவதாகும் பிரதமர் பதில் எழுதியிருக்கிருர்

ஒரு மத்திய ஸ்தாபனமாகிய அக்கவுண்டெண்ட் ஜெனரல் அலுவலகத்திற்கு மொழிப் பிரச்னையில் ஒரு மாநில அரசு உத்திரவு இடுவதும், அதில் இந்தி பேசாத மாநிலத்தைச் சார்ந்தவர்களுக்கு சிரமம் ஏற்பட்டும் இதில் தான் தலையிட முடியாது என்று பிரதமர் கூறுவதும் நமக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனல் பிரதமர் ஏன் தலையிட முடியாது என்கிருர் என்பதனை அவரின் சமீப கால பேச்சுக்கள் நமக்கு புரிய வைத்துள்ளன.

## எந்தவொரு மொழித்திணிப்பும் எதிர்ப்பையே சந்திக்கும்

நாம் இன்றைய பிரதமர் அவர்களுக்கு மீண்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிருேம். தயவுசெய்து மொழிப் பிரச்சனையிலும் பழைய காங்கிரஸ் ஆட்சியாளர்கள் பாதையிலே பயணப்பட்டு விடாதீர்கள்.

அனைத்து மக்களும் அவரவர் தாய் மொழியோடு இந்தி மொழியையும் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நிர்ப்பத்திக்கும் பாணியில் பேசுவது எவ்வளவு அர்த்த மற்றது, எவ்வளவு அபாயகரமானது என்பதனை பிரதமர் புரிந்து கொள்ள வேண்டும்.

பல்வேறு மொழிகளைப் பேசக்கூடிய—பல்வேறு கலாச்சாரங்களைக் கொண்டுள்ள— பல தேசிய இனங்களைக் கொண்டுள்ள— நாடு நமது இந்தியா.

ஆங்கில ஏகாதிபத்திய வாதிகள் நமது தேசிய மொழிகளின் வளர்ச்சியைத் திட்டமிட்டு ஒடுக்கி அங்கே ஆங்கிலத்தைத் திணித்தார்கள் என்பது உண்மையே

ஆனல் அதற்கா்க, ஏகாதிபத்தியவாதிகள் ஆங்கிலத்தைத் திணித்தார்கள் நாங்கள் அதனை அகற்றி அதனிடத்தில் இந்தியைத் திணிக்கிருேம் என்று கிளம்புவதா?

மக்கள் மீது திணிக்கப்பட்ட ஆங்கிலத்தின் ஆட்சிக்கு இந்தியை வாரிசாக்க முயற்சிப்பதா?

எந்தத் திணிப்பும்அது அந்நிய மொழித் திணிப்பாயினும் அல்லது எந்த வொரு இந்திய மொழித்திணிப்பாயினும் மக்களின் கடுமையான எதிர்ப்பிற்கு உள்ளாகத்தான் நேரிடும்.

## அர்த்தமற்ற கனவு

நம்நாட்டில் ஆங்கிலம் இணைப்பு மொழியாக இன்றைக்குத் திகழ்வது நாம் விரும்பாமலே நேர்ந்துவிட்ட ஒரு விபத்து.

சரித்திரத்தில் ஏற்பட்டு விட்ட இந்த விபத்தை மொரார்ஜி அவர்கள் தன் காலத்திற்குள் மாற்றிவிடலாம், தன் அதிகாரத்தைக் கொண்டு அதனை அகற்றி விடலாம் என்று கனவு காண்பது அர்த்த மற்றது.

இன்று ஆங்கிலம் உள்ள இடத்தில் ஏதாவதொரு இந்திய மொழியினை இணைப்பு மொழியாக இந்திய மக்களே காலப்போக்கில்— தங்களது கலாச்சார வணிக வளர்ச்சிப் போக்கில்—உருவாக்கிக் கொள்ளலாம்.

ஆனல், அப்பொழுதும் கூட பிறமொழி பேசுவோரோடு தொடர்பு கொள்ள வேண்டியோர் மட்டும் அதனை அறிந்திருந்தால் போதுமானதாக இருக்குமே தவிர இந்த நாட்டு குடிமகன் ஒவ்வொருவரும் தெரிந்திருக்க வேண்டிய அவசியமோ, கட்டாயமோ எதுவுமிருக்காது.

மேலும், அந்தநிலை உருவாகும் வரை ஆங்கிலத்தின் உபயோகம் தொடர்ந்து நீடிக்க வேண்டும்.

இந்தி திணிப்புஎன்பது முற்றிலுமாகக் கைவிடப்பட வேண்டும்.

இதற்கிடையில், தேசிய மொழிகள் அனைத்தையும் வளப்படுத்துவதற்கு, அவற்றை விஞ்ஞானயுகத்திற்கேற்ற மொழிகளாக வளர்ப்பதற்கு வேண்டிய அனைத்து முயற்சிகளும் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டும்.

அனைத்து தேசிய மொழிகளுக்கும் சிறப்பான மொழிபெயர்ப்பு வசதிகள் செய்துதரப்படவேண்டும். நாடாளுமன்ற நடவடிக்கைகள் அனைத்தும் அனைத்து தேசிய மொழிகளிலும் நடத்தப்பட வேண்டும்.

மாநிலங்களில் அந்தந்த மாநில மொழிகளை ஆட்சி மொழியாக்க வேண்டும். மாநில நிர்வாகமும், மாநிலத்தில் உள்ள நீதிமன்ற நடவடிக்கைகளும் முழுக்க முழுக்க மாநில மொழியிலேயே நடத்தப்பட வேண்டும்.

கல்வித்துறையின் அனைத்து மட்டங்களிலும் அந்தந்த மாநில மொழியே பயிற்று மொழியாக வேண்டும்

## மும்மொழித் திட்டம் மோசடித் திட்டம்

மும்மொழித் திட்டம் என்பது ஒரு மோசடித் திட்டம். இந்தியைத் திணிக்க காங்கிரஸ் ஆட்சியாளர்களின் மூளையிலே உதித்திட்ட திட்டம்.

இந்தி பேசும் மாநிலங்களிலுள்ளவர்கள் இந்தி, ஆங்கிலம் இவற்ருேடு மற்ருெரு இந்திய மொழியையும் பயில்வர் என்ற காங்கிரஸ் ஆட்சியாளர்களின் பசப்பல் மொழி இன்று நடைமுறைக்கு வரவில்லை என்பதை மக்கள் உணர்ந்துள்ளனர். இந்த மும்மொழித் திட்டத்தின்கீழ் இன்றையதினம் இந்தி பேசும் மாநிலத்தவர்கள் இந்தி, ஆங்கிலம் இரண்டு மொழிகளை மட்டும் பயில இந்தி பேசாத மாநிலத்தவர்கள் தங்கள் தாய் மொழி, ஆங்கிலம், இந்தி ஆக மூன்று மொழிகளைப் பயில வேண்டியிருக்கிறது.

முடிவில் இவர்களுக்கு மொழிகளைப் படிக்க நேரம் இருக்கிறதே தவிர சம்பந்தப்பட்ட துறைகளில் தேர்ச்சி பெற முடிவதில்லை.

எனவே இந்த மும்மொழித் திட்டம் முடிவுக்கு கொண்டு வரப்பட வேண்டும்.

இந்த நடவடிக்கைகளை எல்லாம் எடுத்திடாமல், இந்தி 60 சதவிகிதம் பேருக்குத் தெரியும், அதனை 100 சதவிகிதத்தவரும் கற்றுக் கொள்ள வேண்டும், தேசபக்தி உருவாக்கும் கட்டாயம் அதனை சாதித்து விடும் என்று பேசுவது நீரு பூத்த நெருப்பாகக் கனன்று கொண்டிருக்கும் தேசிய இனங்களின் கோபத்தைக் கிளறுவதாகவும். அவர்களின் இதயத்தைத் குத்துவதாகும். ஜனதா ஆட்சியாளர்களே, உங்களின் இந்த தகாத பேச்சுக்களாலும் தவருன நடவடிக்கைகளாலும் அவர்கள் கிளர்ந்தெழுந்தால் விளைவு எப்படியிருக்கும் என்பதை நினைத்துப் பாருங்கள்; தயவு செய்து நெருப்போடு விளையாடாதீர்கள்.

---

## குடி கிடப்பு சட்டம் பற்றி அரசு விளக்கம்

குடிக் கிடப்பு சட்டம் பற்றி தமிழ்நாடு விவசாயிகள் நிறைவேற்றி அரசுக்கு அனுப்பியிருந்த தீர்மானம், த. நா. வி. ச. செயலாளர் அனுப்பிய கடிதம் ஆகியவற்றிற்கு, தமிழ் நாடு அரசு இணைச் செயலாளர் திரு எஸ். இராஜகோபாலன் அவர்களிடமிருந்து 6-ந் தேதி கையொப்பமிடப்பட்டு வந்துள்ள விளக்கக் கடிதம் வருமாறு:—

### வருவாய்த்துறை

அனுப்புனர்: திரு எஸ். இராஜகோபாலன் பி. எஸ்ஸி
அரசு துணைச்.செயலாளர்

பெறுநர்: செயலர்
தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்
6-16 பைபாஸ் ரோடு
மதுரை—18

புனித ஜார்ஜ்கோட்டை
சென்னை – 9
2-9—1977

ஐயா,

பொருள்: தமிழ்நாடு விவசாயிகள் சங்கம் நிறைவேற்றிய தீர்மானம் சம்பந்தமாக

குறிப்பு: தமிழ்நாடு விவசாயிகள் சங்க செயலாளரிடமிருந்து 'மதுரை 28—7—77' என தேதியிட்டு வந்த கடிதம்.

தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்—மதுரை நிறைவேற்றிய 5-வது தீர்மானம் குறித்து கீழ்கண்டவாறு தங்களுக்கு அறிவித்துக் கொள்கிறேன்.

யாராவது ஒரு விவசாயி அல்லது விவசாயத் தொழிலாளி குடிவாரதாரர் ஆகவோ, லைசென்ஸ் பெற்றவராகவோ ஏதாவதொருகுடியிருப்பில்1971ஜூன்19ம் தேதி குடியிருந்திருந்தால், 1971-ம் வருடத்திய தமிழ்நாடு குடியிருப்பு குடியிருப்போர்மனைப் பட்டாவழங்கும்சட்டத்தின் 3-வதுபிரிவின்படி, இந்தச் சட்டம் அமுலுக்குவரும் தேதிமுதல் அந்த குடியிருப்பு அவருக்கு சொந்தமாகும். அந்தக்குடியிருப்பில் ஏதேனும் மேற்கோப்பு இருந்தாலும் அதனுடன், எல்லா வில்லங்கங்களும் பாதிக்காமல் அந்தக் குடியுருப்புக்கு சர்வ சுதந்திர உரிமையாளராக அவர் ஆவார். அந்தக் குடியிருப்பில் ஏதேனும் மரங்கள் இருந்தாலும் அவையும் அந்தக் குடியிருப்புதாரருக்கே சொந்தமாகும். ஏனென்ருல், அந்தக் குடியிருப்பின் பழைய சொந்தக்காரருக்கு மரங்கள் உட்பட, மனையடிக்கும், மேற்கோப்புக்கும் அரசாங்கமே நஷ்டஈடு கொடுத்து விடுகிறது. அந்த தீர்மானத்தில் எழுப்பப்பட்டுள்ள புகார் ஒரு பொதுவான தன்மை வாய்ந்தது. இந்தக் குடியிருப்பு சட்டத்தை அமுல் நடத்துவதில், திட்டவட்டமான முறைகேடுகள் ஏற்பட்டால் அந்தக் குறிப்பிட்ட சம்பவங்களை வருவாய்த்துறை அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டுவந்தால் அந்த விஷயத்தில் அவசியமான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும்.




## திமிர்-அகம்பாவம் அடங்கவில்லை

அத்து மீறல்களுக்கு இட்டுச்சென்ற நடவடிக்கைகளை சஞ்சய்காந்தி தன்னுடைய நல்லெண்ணத்திலிருந்து செய்திருக்க முடியுமா என நிருபர் ஒருவர் ஸ்ரீநகரில் கேட்டதற்கு மாஜி பிரதமர் இந்திரா காந்தி "எதைப்போல்?" என்று வினு எழுப்பினர். குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைப் போல் என பதில் வந்தது. "அவன் என்ன செய்தான்? அவன் ஒரு தேசியத் திட்டம் உருவாக்கினுன். நாங்கள் அதை காங்கிரஸ் கட்சியின் திட்டமாக அல்லாமல் அரசாங்கத்தின் ஒரு தேசிய திட்டமாகவே ஏற்றுக் கொண்டோம்'' என்று பதில் அளித்தார் இந்திரா காந்தி.

புரியுதா? அவசர நிலை காலத்தில் தனது மகன் போட்ட ஆட்டத்தையும் புரிந்த அட்டகாசங்களையும் மறைப்பதற்கும் அல்லது நியாயப் படுத்துவதற்கும் முயலும் இந்த மாஜி, ஒரு உண்மையை ஒப்புக் கொண்டுள்ளார். குடும்பக் கட்டுப்பாடு திட்டம் பற்றி மாஜியின் "மகா அறிவாளி"ப் புதல்வன் சஞ்சய்காந்தி ஒரு திட்டத்தை வகுத்தாராம். அதை ஒரு காங்கிரஸ் கட்சியின் திட்டமாகக் கூட அல்லாமல், அரசாங்கமே நிறைவேற்றுகின்ற திட்டமாக ஏற்றுக்கொண்டார்களாம்.

கடைசி வரை காங்கிரஸ் கட்சியின் 25 காசு மெம்பராகக் கூட ஆகாமலிருந்த அந்தப் பேர்வழிக்கு காங்கிரசுக் கட்சிக்கே ஒரு திட்டம் வகுத்துத்தர உரிமையில்லாத போது, தேசிய திட்டம் உருவாக்குவதற்கு என்ன உரிமை இருக்கிறது? அந்த நபருக்கு அந்த உரிமையையார்கொடுத்தது?

காங்கிரஸ் கட்சியில் உறுப்பினராகாமலேயே காங்கிரஸ் கட்சிக்கு முதல் பெரும் செல்வாக்கு பெற்று தேசிய சுதந்திரப் போராட்டத்தை மகாத்மா காந்தியே நடத்திய போது எனது மகன் சஞ்சய் காந்திக்கு தேசிய திட்டம் வகுக்க உரிமையில்லையா? அறிவு இல்லையா? என்று மாஜிப் பிரதமர் கேட்டாலும் கேட்டு விடுவார். அவ்வளவு பெருமை அவரது மகன் மேல்.

பிரதமரின் மகன் என்ற அகம்பாவமும் அடாவடித்தனமும் தவிர எந்த வித முறையான கல்வி அறிவோ அனுபவ அறிவோ இல்லாத-மக்களைப் பற்றி எதுவுமே தெரியாத— அந்த ஆசாமிக்கு குடும்பக் கட்டுப்பாடுபற்றிய தேசிய திட்டம் எப்படி வகுக்க முடிந்தது? இவர் தேசிய திட்டம் வகுக்கிருர் என்ருல் ஏனைய அமைச்சர்களுக்கோ உயர் அதிகாரிகளுக்கோ சொந்த அறிவு இல்லையா? உண்மை என்னவோ அப்போது இதுதான். சஞ்சய்காந்தி என்ருல். சலாம் போட்டார்கள். ஏனென்ருல் பிரதமரின் செல்லப்பிள்ளை, பிரதமரால் தனது பரம்பரை வாரிசாக நாட்டைஆள உருவாக்கப் பட்டுக்கொண்டிருந்தவரல்லவா? ஆகவே தான் கசாப்புக் கடைக்கு ஆடுமாடுகளை இழுத்துச் செல்வது போல் ஏழைமக்களை- இழுத்துச் சென்று கட்டாயமாக அறுவை சிகிச்சை நடத்தப்பட்டனர்; அவமானப்படுத்தப்பட்டனர்; இக்கொடுமையை எதிர்த்ததற்காக காக்கை குருவிகளைச்சுடுவது போல் சுடப்பட்டனர்; இத்தனையும் மாஜியின் அறிவுக் கொழுந்து சஞ்சய் தலைமையில் நடந்தது. இதற்கு பெயர் தேசிய திட்டமாம். சொல்கிருர் மாஜி. மக்களை எந்தளவுக்கு முட்டாள்களாக இன்னும் நினைத்துக் கொண்டிருக்கிருர். புரிகிறதா?

★ ★ ★

## அபாயகரமான முடிவு

நாடு முழுவதும் நெல், அரிசி ஆகியவற்றை தாராளமாகக் கொண்டு செல்ல அக்டோபர் 1-லிருந்து அனுமதிக்கப்படும் என்றும் அதன் பொருட்டு உணவு மண்டல கட்டுப்பாடுகள் நீக்கப்படும் என்றும் மத்திய அரசாங்கத்தின் விவசாய இலாகா அமைச்சர் அறிவித்துள்ளார். இம் முடிவுக்கு மேற்கு வங்க இடதுசாரி அரசாங்கமும் தமிழக அரசாங்கமும் எதிர்ப்புத் தெரிவித்துள்ளன.

அந்த அமைச்சர் அறிவித்ததன் அர்த்தம் பெரும் வியாபாரிகளையும் வர்த்தகச் சூதாடிகளையும் அரிசி, நெல் வியாபாரத்தில் இஷ்டப்படி கொள்ளையடிக்க அனுமதிப்பது என்றுதான் அர்த்தம்.

காங்கிரஸ் கட்சி ஆட்சிக் காலத்தில் உணவு மண்டலங்கள் என்ற பெயரில் ஒவ்வொரு குறிப்பிட்ட உணவு மண்டலத்திற்குள் தான் அந்தந்த மண்டலங்களின். தானியங்கள் கொண்டு செல்லப்பட வேண்டும் என்ற கட்டுப்பாடு இருந்தது. இது ஒரு அரைக்கிணறு தாண்டும் வேலை. தானிய வியாபாரத்தை வர்த்தகச் சூதாடிகளிடம் விட்டு விடாதவாறு மொத்த வியாபாரத்தை அரசாங்கமே எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக அறைகுறை கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. இதனைப்பயன் படுத்தியும் பெரும் வியாபாரிகள் நிலப்பிரபுக்கள் லாப வேட்டை ஆடியதுண்டு, இதனுல் கட்டுப்பாடு என்ருலே இடைஞ்சல் என்ற உணர்வை காங்கிரஸ் அரசாங்கம் ஏற்படுத்தி வைத்தது.

இப்போது ஜனதா ஆட்சி இருந்த கட்டுப் பாட்டையும் நீக்கி விட்டது. ஆக, தானிய விலைகளை குறைக்கும் பொருட்டு தானிய மொத்த வியாபாரத்தை அரசாங்கமே எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக அதற்கு நேர் எதிர்மாருன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

மண்டலங்களுக்குள்ளேயே தானியங்களை வாங்கி பதுக்கல், கள்ளமர்க்கெட்களை நடத்தி வந்த பெரும் வியாபாரிகள் இனிமேல் நாடு முழுவதும் நடத்துவார்கள், எங்கெங்கு நெல், அரிசி அதிகம் விளைகின்றதோ அங்கெல்லாம் புகுந்து தானியங்களை குறைந்த விலைக்கு வாங்கி பற்ருக்குறையான பகுதிகளுக்குகொண்டு போய் முடிந்தளவுக்கெல்லாம் விலையை ஏற்றி கொள்ளை அடிப்பார்கள். இதைத்தான் மத்திய உணவு அமைச்சர் தனது புதிய உத்திரவின் மூலம் ஏற்படுத்தியுள்ளார்.

# வெங்கடாசலம் வாழ்க்கை ...

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

அதைமயக்கம் வந்து விழுந்து செத்து விட்டார் என்று மூடி மறைத்தார்கள். ஊரே கொந்தளித்தது. பத்திரிகைகளிளெல்லாம் வெளிவந்தது. தோழர். வெங்கடாஜலம் தலையிட்டு, "போலீசார் அடித்ததின் விளைவாகத்தான் இறக்க நேரிட்டது'' என்று அறிக்கை தயாரித்து மேலதிகாரிகளுக்கு புகார் செய்தார். விசாரணைகளும் நடைபெற்றன.

தோழர். வெங்கடாசலம் எந்த சாதியினரையும் சமத்துவமாகவும் மரியாதையாகவும் நடத்துவார். அவரது வீடே ஊராட்சி அலுவலகமாக இருந்ததால், அரிசனங்களை நாற்காலிகளில் அமரச் செய்து பேசுவார்.

லெவி நெல்கேட்டு, ஒன்றிரண்டு ஏக்கர் நிலம் வைத்திருக்கிறவர்களிடமெல்லாம் அதிகாரிகள் புகுந்து அள்ளிய போது, "வீட்டுச் சாப்பாட்டிற்கே பற்ருதவர்களிடம் லெவி நெல் அளக்காதே'' என்று அதிகாரிகளை வந்த வழியே திருப்பி விடுவார்.

இவரது ஊரையடுத்து; திருச்சி மாவட்ட எல்லை வருவதால், இங்கிருந்து நெல் கடத்தியவர்களையெல்லாம் தடுத்து நிறுத்தினுர். சாராயம் காய்ச்சல், விற்றல், குடித்தல் ஆகியவற்றைக் கடுமையாக கண்டிப்பார்.

ஊரிலுள்ள கணவன்-மனைவி தகராறு முதல், ஆட்டுப் பஞ்சாயத்து, மாட்டுப்பஞ்சாயத்து, வயற்கடுத் தகராறு, கூலித் தகராறு போன்ற எத்தனையோ பஞ்சாயத்துகள் இவர் முன் வரும். இவரது தகப்பனுர் காலத்தில் ஊர்த்தகராறுகளில் சிக்கி, நிலபுலங்களை விற்று வழக்குகளை நடத்தி, வறுமைப்பட்ட அனுபவம் தோழர் வெங்கடாசலத்துக்கு உண்டு. அந்தக் கதி மற்றவர்களுக்கும் ஏற்பட்டு விடக் கூடாதே என்பதில் தனி அக்கறையுடையவராக இருந்தார். தகராறு செய்து கொண்டவர்கள் அடிதடி நடத்தி, போலீசில் சிக்கி கைகால் முறிந்து—கோடு நாடு சென்று சீரழியாமல், நன்கு விசாரணை செய்து, இருதரப்பும் ஒப்பும்படி முடிவு சொல்லி, சுமுகமாகத் தீர்த்து வைத்து சமரசமாக அனுப்புவார்.

இவருக்கு வயது 52 ஆன போகிலும், வாலிபர்களிடத்திலும் மாணவர்களிடத்திலும் அன்பாகவும் ஆர்வமாக பேசி, வாலிபர் முன்னணி, மாணவர் சங்கங்கள் முதலியன அமைப்பதில் முன்நின்ருர்.

இவர் தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத்திற்கு தலைவராக இருந்தார். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தஞ்சை மாவட்ட செயற்குழு உறுப்பினராகவும், தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினராகவும் இருந்தார் தஞ்சை வட்ட கட்சியின் செயலாளராகவும் பணியாற்றி வந்தார்.

சமுதாயத்தின் அடித்தட்டு மக்களான அரிசன மக்களுக்கும் பிற்பட்ட மக்களுக்கும், இரவு பகல் பாராமல் ஓயாது உழைத்து வந்த தோழர் வெங்கடாசலம்—மக்களுக்காக எந்தத் துன்பத்தையும் இடையூறுகளையும் எதிர்த்து நிற்பதில் அஞ்சாத சிங்கமாய் விளங்கிய தோழர் வெங்கடாசலம்—கட்சி வேலையாக வெளியூர் சென்று விட்டு. 21—9—77 இரவு சுமார் 8 மணிக்கு சோளகம்பட்டி ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி — 3 கிலோ மீட்டருக்கு அப்பால் உள்ள தனது ஊரான இராயமுண்டான் பட்டிக்கு—ஒற்றையடிப் பாதையில் தனியாக நடந்துவந்து கொண்டிருந்தார். ஒரு கிலோ மீட்டர் தூரம் கூட கடக்காதிருக்கும் போதே, அவரைக் காணவில்லை.

தோழர் வெங்கடாசலம் அவர்கள், வெளியூர் சென்ருல் எப்படியும் இரவு வீட்டுக்கு வந்துவிடுவது வழக்கம்.மழைக் காலமானதால், 'ரயில்வே ஸ்டேஷனுக்கு குடையோடு ஆள் அனுப்பு'' என்று 21-ந்தேதி காலை 7-30 மணிக்கு மனைவி லீலாவதியிடம் சொல்லிவிட்டு வீட்டை விட்டுப் புறப்பட்டார். அன்று இரவு 8-15 மணி ரயிலில் வந்து இறங்கி, வீட்டுக்கு வரவேண்டியவர் வரவில்லை. மழையில்லாததால் மனைவி குடை கொடுத்து யாரையும் அனுப்பவுமில்லை. ரயில் அட்டவணை நேரத்துக்கு சற்று முன்னதாகவே சோளகம்பட்டி ரயில்வே நிலையத்தை அடைந்து விட்டது. இறங்கி, இருட்டில் —ஒற்றையடிப்பாதையில், தன்னந்தனியாக வரும்போதுதான்-ரயிலடியிலிருந்து இராயமுண்டான்பட்டி செல்லும் மண் பாதையில்—ரயிலடியிலிருந்து ஒரு மைலுக்குள்ளாக, தோழர் வெங்கடாசலம் அடியாட்களால் மடக்கப்பட்டு, இழுத்து செல்லப்பட்டு, கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று எல்லோரும் நம்புகிருர்கள்.

எப்பொழுதும் சிரித்த முகத்தோடு, சகல கட்சியினருடனும் அன்பாகவும் பாச உணர்வோடும் இருப்பவர்; அவர் இருக்கிற இடம் ஒரு ஊரே இருப்பது போல கலகலப்பாக இருக்கும். அவர் போய்விட்டார்.

கணவனை இழந்து லீலாவதி கண்ணீரும் கம்பலையுமாய் தேம்பித்தேம்பி அழுகிருர். மகன்கள் 14 வயதுள்ள ஜீவகுமாரும், 13 வயதுள்ள சுகுமாரும், 0 வயதுள்ள கண்ணனும் அடக்க முடியாத துயரத்திலும். ஏமாற்றத்திலும் ஆழ்ந்து கிடக்கிருர்கள்.

வீட்டுச் சுவற்றிலே வெங்கடாசலம்—லீலாவதி திருமண வாழ்த்து மடல் மாட்டப்பட்டிருக்கிறது. அதன் கீழே லீலாவதியும் மகன்களும் கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிருர்கள்.

24—9—77 முதல் தினசரி நூற்றுக்கணக்கான விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும், கட்சித் தொண்டர்களும், மாணவர்களும் இராயமுண்டான்பட்டி சென்று அவரது மனைவி மக்களுக்கு ஆறுதல் சொல்லி வருகிருர்கள். ஆறுதல் சொல்லப் போகிவர்களெல்லாம் வெங்கடாசலத்துடன் நெருங்கிப் பழகி பாசபந்தத்தோடு இருந்தவர்களாதலால் அவர்களும் கண்ணீர் விடுகிருர்கள். 30 ஆண்டுகளாக நாட்டு மக்களுக்கு பாடுபட்டும், சொத்துச் சேர்க்காத உத்தமர் என்று ஒவ்வொருவரும் பேசுகிருர்கள்.

பொதுவாக, தஞ்சை மாவட்டம் முழுவதும் பரபரப்பு , ஆத்திரமும் அடைந்துள்ளது.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

வர்க்கத்திற்கெதிராகவே அரசாங்கத்தை கொண்டுபோய் நிறுத்தும்; இத்தகைய ஒன்று நடப்பதை சிஐடியூ விரும்பவில்லை. எனவே தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காக நீண்ட போராட்டத்தை நடத்திவரும் தொழிலாளர்களுக்குச் சாதகமாக தொழிற்தகராறுகளை தீர்ப்பதற்கு தன்னுடைய சக்தியையும் மூலாதாரங்களையும் பயன்படுத்துமாறு அரசாங்கத்தை இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

போராடுகின்ற பாடித் தொழிலாளர்களுடனும் லட்சுமி மெஷின் தொழிற்சாலைத் தொழிலாளர்களுடனும் தங்களுடைய ஒற்றுமையைக் காட்டும் பொருட்டு சாத்தியமான அனைத்து வகைகளிலும் தங்களுடைய சக்தியையும் மூலாதாரத்தையும் பயன்படுத்துமாறு அனைத்து தொழிற்சங்கங்களுக்கும் அனைத்து ஜனநாயக எண்ணங் கொண்டோர்க்கும் இக்கூட்டம் அறைகூவல் விடுகிறது.

# வெங்கடாசலம் ....

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

கருதியு ரெவினியூ அதிகாரிகளிடமும் போலீஸ் அதிகாரிகளிடமும் எவ்வளவோ வாதாடினார். ஒன்றும் பலிக்கவில்லை பண்படுத்தி பயிர் செய்த நிலத்தை விட்டு வெளியேற முடியாது என்றும், தங்களுக்கே பட்டா போட்டுக் கொடுக்க வேண்டுமென்றும் கோரி, போராடுமாறு வெங்கடாசலம் அரிசன விவசாயிகளுக்கு உணர்ச்சியூட்டினார். இதனாலும் பலருக்கு அவர் மீது ஆத்திரம்!

## மிராசுகளின் பகைமை முற்றுகை

இவ்வாறு சொரக்குடி பட்டிபெருமாள், அல்லூர் மிராசுகள், காருகுடி மிராசுகள், ஒரத்தூர் மிராசுகள், கூலிப் போராட்டத்தினால் கோபமடைந்த மிராசுகள் தங்கள் கள்ளர் வகுப்பில் பிறந்தும் அரிசனங்களை சரிசமமாக நடத்துகின்றாரே என்றுசொந்த சாதியைச் சேர்ந்த சில சாதி வெறியர்கள் ஆகிய பல்வேறு எதிர்ப்புக்களும் பகைமையும் வெங்கடாசலத்தை முற்றுகையிட்டன.

இவை தவிர, நெல் கடத்தல்காரர்களுக்கு உடைந்தையாக இருந்த போலீஸ் அதிகாரிகள் மீது மேலதிகாரிகளுக்குப் புகார் செய்தார். விசாரணைகள் நடக்கும் நடவடிக்கைகளும் வரும்.

அதே போல சிவில் சப்ளை தாசில்தார் மீதும் நடவடிக்கை வந்தது.

அவசர நிலைக் காலத்தில் இப்பொழுது கள்ளப் பிரம்பூரில் சப் இன்ஸ்பெக்டராக இருக்கும் கோவிந்தசாமி, அப்பொழுது இந்தச் சரகத்துக்கு சப் இன்ஸ்பெக்டராக இருந்தார். வெங்கடாசலம் தலைமறைவாக இருந்த போது, அவரது வீட்டை இந்த சப் இன்ஸ்பெக்டர் சூரையாடினார். குடும்பத்திலிருந்து தொல்லை பல விளைவித்தார். பிறகு வெங்கடாசலம் கைது செய்யப்பட்டார்.

வீடு சூறையாடப் பட்டதைக் கண்டித்து தோழர். பி. ராமமூர்த்தி, கவர்னரின் ஆலோசகர் தவேயிடம் புகார் செய்தார். அதன் பேரில் போலீஸ் அதிகாரிகள் மீது விசாரணை நடந்தது.

வெங்கடாசலம் விடுதலையான பிறகு, இந்த விபரங்களை ஷா கமிஷனுக்கு அனுப்பினார், அதில் சப்-இன்ஸ்பெக்டர் கோவிந்தசாமியின் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சோளகம்பட்டி ரயில்வே ஸ்டேஷனில் ஆந்திர யாத்ரீகர் ஒருவரை போலீஸ் அடித்துக் கொன்றதை அம்பலப்படுத்தினார்.

தஞ்சைக் காவல் நிலையத்தில் ஜமீலா என்ற முஸ்லீம் பெண்ணை கற்பழித்துக் கொன்று விட்டதையும் அம்பலப்படுத்தி, சர்வ கட்சியினரையும் திரட்டினார்.

இவ்வாறு பாதிக்கப்பட்ட பல்வேறு அதிகாரிகளுக்கும் மிராசுகளுக்கும், நெல் கடத்தல், சாராயம் விற்பவர் யாவருக்கும் வெங்கடாசலத்தின் மீது கோபம் இருந்தது.

## தீனிபோட்டு வளர்க்கப்பட்ட அடியாள் திடீர் மறைவு

சொரக்குடி பெருமாளின் தோப்பு வீட்டில், கடந்த 3 வருடமாக, மலையாளி என்று அழைக்கப்படும் ஒருவன், யாதொரு வேலையுமில்லாமல் தீனி போட்டு வளர்க்கப்பட்டு வருகிறான். அவன் மலையாளி அல்லவாம். புதுக்கோட்டை மாவட்டம் கிள்ளுக்கோட்டையைச் சேர்ந்தவனாம். அவன் பெயர் கந்தசாமி மழவராயராம். அவன் இந்தச் சம்பவத்துக்குப் பிறகு பெருமாளின் வீட்டில் இல்லை.

வெங்கடாசலம் 21-9-77 ல் திருக்காட்டுப் பள்ளி அருகிலுள்ள அம்மையகரம் என்ற ஊருக்கு கட்சி வேலையாக வந்துவிட்டு, சின்னக் கொட்டாரப்பட்டி ரெங்கசாமி மகன் பன்னீர் செல்வத்தின் சைக்கிள்பின்னால்அமர்ந்துகொண்டு பூதலூர் ரயில்வே நிலையத்துக்கு வந்தார். அங்கு அவரை செங்கோட்டை பாசஞ்சர் ரயிலில் இரவு 7-35க்கு ஏற்றி விட்டு, பன்னீர்ச் செல்வம் போய் விட்டார். ரயிலில் அடுத்த ஐயனாபுரம் ஸ்டேஷன் வரைக்கும் சஞ்சயபுரம் வி. கணேச உடையார் என்பவருடன் வெங்கடாசலம் பேசிக் கொண்டுவந்திருக்கிறார்.

## இரயிலை விட்டிறங்கி தனியே சென்ற வெங்கடாசலம் எங்கே?

இரயில் சோளகம்பட்டி ஸ்டேஷனை அடைந்ததும், இரயிலை விட்டு இறங்கி, ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இராயமுண்டான் பட்டியை நோக்கி தனியே சென்ற வெங்கடாசலத்தை தான் பார்த்ததாக பெருமாளிடம் வேலை பார்க்கும் ராஜப்பா என்பவன் கூறியுள்ளான்.

இந்த ராஜப்பாவே டி. எஸ். பி. யிடம், "ரயிலை விட்டு இறங்கி வெங்கடாசலம் தெற்கே போனார். ரயில் புறப்பட்டு விட்டது. நான் ரயில் ஏறிப் போய் விட்டேன்" என்று கூறியுள்ளார். அவனை விசாரித்து விட்டு, வீட்டுக்குப் போகச்சொல்லி விட்டார்கள் அவனை இப்போது காணோம்.

செப்டம்பர் 21-ம் தேதி வீட்டை விட்டுக் கிளம்பிய வெங்கடாசலத்தை 24.ம்தேதி வரையும் வீட்டார் தேடவில்லை. கட்சி வேலையாக போயிருப்பார் என்று கருதினர் கட்சிக்காரர்களோ வீட்டில் இருப்பார் என்று நினைத்திருந்தனர். 3 நாட்களாக விபரம் தெரியாது.

## புதிய ஆட்கள்வருகை-பழைய ஆட்கள் தலைமறைவு

21-ம் தேதி 8 மணிக்கு மேல் சோளகம்பட்டி ரயில்வே ஸ்டேஷனை விட்டு வெங்கடாசலம் வீட்டுக்குப் போகும் போது—அதற்கு சிறிது நேரத்துக்கு முன்னதாகவே, ரயில்வே ஸ்டேஷனுக்கு தெற்குப் புறத்தில் — பெருமாளுக்கு சொந்தமான வயல்கரையில் வழக்கமாக சாராயம் விற்றுக் கொண்டிருந்த ஒருபெண், புதிதாக பலர் அன்று வந்து சாராயம் குடித்ததாகச் சொல்லியிருக்கிறாள்.

அந்த இடத்தில் முன்னாலேயே காத்திருந்த பெருமாளுடைய ஆட்கள் வெங்கடாசலத்தை வழி மறித்துக் கடத்தி கொன்றிருக்க வேண்டுமென்று மக்கள் கருதுகிறார்கள்.

அவரைக் கடத்திக் கொண்டு போய் உயிரோடு வைத்திருக்க முடியாது. ஏனென்றால் ராஜப்பா தலைமறைவாகி விட்டதும், மலையாளி என்ற கந்தசாமி ஓடிப் போய் விட்டதும் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்கிறது.

இது சம்பந்தமாக, கட்சியின் மாவட்டக்குழு உறுப்பினர். தோழர் மணியரசன் பூதலூர் காவல் நிலையத்தில் ஒரு புகார் கொடுத்தார். வெங்கடாசலத்தின் மனைவி லீலாவதியும் புகார் கொடுத்திருக்கிறார். மாவட்டக் குழு சார்பில்பெரிய அதிகாரிகளுக்கெல்லாம் மனு அனுப்பப்பட்டுள்ளது.

தோழர்கள். உமாநாத் நம்பியார், ஜி. வீரய்யன் பாரதிமோகன் ஆகியோர், எஸ்.பி.யைப் பார்த்துப் பேசினர். நம்பியார் கலெக்டரிடமும் பேசியுள்ளார்.

உமாநாத் முதலமைச்சர் எம்.ஜி.ஆருடன் தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டு "சென்னையிலிருந்து ஒரு பிரிவு துப்பறியும் போலீசாரை அனுப்பி அவர்கள் மூலமாக விசாரணை நடத்த வேண்டும்" என்று கோரியதை, எம்.ஜி. ஆர். ஏற்றுக் கொண்டு, அவ்வாறே விசாரணையும் நடைபெற்று வருகிறது.

பல்வேறு சந்தர்ப்ப சாட்சிகளையும் சந்தேகத்திற்கிடமுள்ளவர்களையும் விசாரிப்பதுடன் கூடவே, வெங்கடாசலத்தின் வீட்டையடுத்து வசிப்பவனும், அவரது நடமாட்டங்களையும் போக்குகளையும் நன்கறிந்தவனும், பெருமாளுக்கு வேண்டியவனுமான பஞ்சாயத்து போர்டுகிளார்க் லக்கையன் என்பவனையும் போலீசார் விசாரித்து வருகிறார்கள்.

காவல் துறைக்கு சவாலாக முன் நிற்கும் விடப்பட்ட இந்தப் படுகொலையை, காவல்துறை எவ்வாறு ஏற்று வெற்றி பெறுகிறது என்பதைக் காண, தமிழக மக்கள் ஆர்வத்தோடு எதிர்பார்க்கிறார்கள்.

# கடன் நிவாரணச்சட்டம் கொண்டுவர ஒன்றுபட்ட இயக்கம்

## திண்டுக்கல் மாநாடு அறைகூவல்

மதுரை மாவட்ட கடன் நிவாரண மாநாடு 25-9-77-ல் திண்டுக்கல்லில் நடைபெற்றது. இம்மாநாட்டிற்கு தமிழ்நாடு விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் ஆர். ராமராஜ் தலைமை வகித்தார். தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் மதுரை மாவட்ட கமிட்டி சார்பில் நடத்தப்பட்ட இம் மாநாட்டில் சர்வகட்சித் தலைவர்களும் பங்கெடுத்தனர்.

கிராமப்புற மக்களைக் கடுமையாக அழுத்திக் கொண்டிருக்கும் கொடிய பிரச்னைகளில் ஒன்று கடன் சுமை. கிராமப்புறங்களில் ஆதிக்கம் புரியும் நிலப்பிரபுத்துவம் விளைவிக்கின்ற தீயவிளைவுகளில் ஒன்றே ஏழை விவசாயிகளின் கடன் தொல்லை. இவர்கள் தங்களுடைய விவசாய,குடும்ப செலவுகளுக்கு பெரிதும் நிலப்புரபுக்களையும் கொடிய வட்டிக்காரர்களையும் நம்பியே வாழ வேண்டியுள்ளது. கடனை அடைக்க முடியவில்லை கடன் அதிகரிக்கிறது. இதனால் இருக்கின்ற கொஞ்ச நஞ்ச நிலத்தையும் ஏனைய உடைமைகளையும் இழக்க வேண்டியுள்ளது, இல்லையெனில் மேற்கொண்டு கடன் கிடைப்பதில்லை.

மேலும் ஏராளமாக சிறுவிவசாயிகள், நிலப்பிரப்புக்களிடமும் கொடிய வட்டிக்காரர்களிடம் வாங்கிய கடனுக்கு வருடாவருடம் கட்டிவந்த வட்டியே வாங்கிய அசலை மிஞ்சிவிடுகிறது.

எனவே, வருடந்திற்கு ரூ. 5000 வரை வருமானமுள்ள விவசாயிகள் பட்டுள்ள கடன்கள் அனைத்தையும் ரத்துச் செய்து நிவாரணம் அளிக்க வேண்டுமென வற்புறுத்தும் பொருட்டு இம்மாநாடு கூட்டப்பட்டது.

## எஸ். அழகர்சாமி துவக்கவுரை

மதுரை—முகவை மாவட்டங்களிலிருந்தும் திருச்சி மாவட்டம் கரூர் தாலுகாவிலிருந்தும் 513 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

மாநாட்டை ஆரம்பித்து வைத்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் எம். எல். ஏ. வான அழகர்சாமி பேசிய போது சட்டமன்றங்களிலும் நாடாளுமன்றங்களிலும் மக்களின் துயரநிலைகள் பற்றி ஆளுங்கட்சிகள் பேசுவதொன்றும், நடைமுறையில் செயல்படுவதுவேறொன்றுமாக இருக்கின்றன என்றார்.

## என். வரதராஜன் வரவேற்புரை

மாநாட்டில் வத்திருந்தோரை வரவேற்று தோழர் என். வரதராஜன் எம். எல்.ஏ. பேசியபோது இம்மாநாடு தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் முடிவுப்படி நடக்கிறது; 1978 ஜனவரியுடன் முடிவடையும் கடன் வசூல் ஒத்தி வைப்புச் சட்டம்மேலும் நீடிக்கப்பட்டாலும் கடன் பிரச்னை தீரப்போவதில்லை: எனவே, கடனிலிருந்து நிவாரணம் பெற விரிவான சட்டம் கொண்டுவர இம்மாநாடு முடிவு எடுக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

மாநாட்டு நகல் தீர்மானத்தை பிரரேபித்து தமிழ்நாடு விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் கோ. வீரய்யன் பேசினார்விவசாயிகளின் விளைப் பொருட்களுக்கு குறைந்த விலை ஆனால் அவர்கள் வாங்கும் ஆலைப் பொருட்களுக்கு அதிக விலை இருப்பதுவும் விவசாய அபிவிருத்திச் செலவும் வறட்சியும் விவசாயிகளின் கடன் சுமையை அதிகமாக்குகின்றன. விவசாயத் தொழிலாளர்களுக்கு வருடத்தில் 100 நாட்கள் கூட வேலை கிடைப்பதில்லையாதலால் அவர்களின் கடன் பளு அதிகரிக்கிறது; கடன் ஒத்திவைப்பு மேலும் மேலும் வட்டியைத் தான் அதிகப்படுத்தி கடன் பளுவை கூடுதலாக்கும். புதிய கடன்கிடைப்பதில்லை எனவே, கடன் நிவாரணத்திற்கு கூட்டு இயக்கம் நடத்த வேண்டும் என்று பேசினார். இந்நகல் தீர்மானத்தின் மீது 34 பிரதிநிதிகள் விவாதம் செய்தனர்.

மேலும் இம்மாநாட்டில் தோழர் சங்கரய்யா எம். எல். ஏ. (மார்க்சிஸ்ட்) கோபாலகிருஷ்ணன் எம், எல், ஏ. (காங்) திரு. லத்தீப் எம். எல். ஏ. (மு. லீக்) தோழர் எஸ். ஏ. தங்கராஜன் (சிஐடியூ) தோழர் கே, பி. ஜானகியம்மாள் (ஜனநாயக மாதர் சங்கம்) குப்புசாமி (ஜனதா) ஆகியோரும் சிறப்புரையாற்றினர். கடன் சுமை, வட்டிக் கொடுமை அதிகரிப்பு ஆகியவற்றால்விவசாயிகள்,தொழிலாளர்கள் பாதிக்கப்படுவது பற்றி பேசினர். மேலும் தேச உடைமையாக்கப்பட்ட வங்கிகள், கூட்டுறவு ஸ்தாபனங்கள் பெருமுதலாளிகளுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் தான் அதிகமான கடன்கள் கொடுத்து வருகின்றன. தனியார்களிடம் வாக்கும் கடன்களிடம் மோசடித்தனம் அதிகரித்து விட்டன. கடன் ஒத்திவைப்புச் சட்டங்களால் கிராமப்புற மக்களின் கடன்சுமை குறையவில்லை.

எனவே, மாநாட்டின் நகல் தீர்மானத்தின் அடிப்படையில் ஆண்டு வருமானம் ரூ. 5000- வரை உள்ள கிராமப்புற, நகர்ப்புற மக்களின் கடன்கள்—தனியார் கடன்களாயினும் சரி, அரசாங்கக் கடன்களாயினும் சரி. கூட்டுறவுத்துறை கடன்களாயினும் சரி—அனைத்தும் ரத்துச்செய்யப்படவும், அவர்கள் இதுவரை கடன் பேரில் அடகு வைத்துள்ள அனைத்துப்பொருட்களும் இலவசமாக திருப்பி தரப்படவும் வகை செய்யும் விரிவான கடன் நிவாரணச் சட்டம் கொண்டுவர வேண்டுமென்று அரசாங்கத்தை வற்புறுத்தினர்.

இறுதியாக தோழர் வீரய்யன் விவாதங்களுக்கு பதில் அளித்து நகல் தீர்மானத்திற்கு சில திருத்தங்களுடன் இறுதித் தீர்மானத்தை அளித்துப் பேசினார். அதனை மதுரை மாவட்ட விவசாய சங்கச் செயலாளர் தோழர் வி. ஏ. கருப்பசாமி ஆதரித்துப் பேசினார். தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பின்பு திண்டுக்கல்லில் உள்ள பெரியார் திடலில் என். வரதராஜன் எம்எல்ஏ தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

---

## திருத்தம்

அக். 2-ந்தேதிய இதழில் 7-ம் பக்கத்தில் அனைத்து தொழிற்சங்கங்களின் கோரிக்கை வாரம் சம்பந்தமான அறிவிப்பில் "செப்டம்பர்" என்பதை 'அக்டோபர்' எனதிருத்தி வாசிக்கவும்.

---

## எழுத்தாளர் மாநாடு

9—10—77 ஞாயிறு 10 மணிக்கு (பாளையங்கோட்டை மகாராஜா நகர் மின் குழு ஊழியர் சங்கக் கட்டிடத்தில் துவங்குகிறது.

பங்குகொள்வோர்
கே. முத்தையா
செந்தில்நாதன்
தணிகைச் செல்வன்
மேலாண்மை பொன்னுச்சாமி